# சந்திரா

# தமிழ் உரைநூல்







நான்காம் வகுப்பு

சந்திரா

# தமிழ் உரைநூல்

## நான்காம் வகுப்பு

அரசினரின் நான்காம் வகுப்புத் தமிழ்ப் பாட நூலில் உள்ள உரைநடைப் பாடங்களுக்கு அருஞ்சொற்பொருள், மொழிப் பயிற்சி, வினு-விடை, இலக்கணக் குறிப்பு, செய்யுள்களுக்குச் சொற்பொருள், கருத்துரை, வினு-விடை ஆகியவை அடங்கியுள்ளன.

ஆசிரியர் :
புலவர் பு. செல்வராசன்,
முன்னாள் தலைமைத் தமிழாசிரியர், C. A. H. H. M. உயர்நிலைப்பள்ளி,
சென்னை-1

சுதந்திரா பதிப்பகம்
பப்ளிஷர்ஸ் & புக்செல்லர்ஸ்
செவ்வாய்ப்பேட்டை : : சேலம்-2
(போன் : 8579)

பதிப்புரிமை] 1972 [விலை : 80 காசுகள்

மூன்றாம் பதிப்பு—1972

# முன்னுரை

அரசியலார் அண்மையில் (1972ல்) வெளியிட்டுள்ள நான்காம் வகுப்புத் தமிழ்ப் பாடநூலில் வந்துள்ள உரைநடைப் பாடங்களுக்கு அருஞ்சொற்பொருள், மொழிப் பயிற்சி, வினா-விடை ஆகியவைகளும், செய்யுளுக்குச் சொற்பொருள், கருத்துரை, வினா-விடை ஆகியவைகளும், இலக்கணக் குறிப்புகளும் இவ் வகுப்பில் படிக்கும் குழந்தைகள் எளிதில் படித்தறியுமாறு மிகத் தெளிவாக எழுதப்பட்டிருக்கின்றன.

இதை வாங்கிப் படிக்கும் குழந்தைகள் தேர்வில் உறுதியாக வெற்றிபெற வேண்டும் என்பதற்காக இதில் அருஞ்சொற்பொருள் விரிவாகவும், பாடநூலில் தரப்பட்டுள்ள வினாக்களுக்கு மட்டுமன்றி, பாடம் முழுவதையும் தழுவிய புதிய வினாக்கள் சேர்த்து, அவற்றிற்குரிய விடைகளும் தரப்பட்டிருக்கின்றன.

இந்த உரைநூலை நான்காம் வகுப்புக் குழந்தைகள் வாங்கிப் பயன்படுத்துமாறு செய்யும் வண்ணம் தொடக்கப் பள்ளி ஆசிரியர்களையும், பள்ளிக்கூட நிர்வாகிகளையும் வேண்டிக்கொள்கிறோம்.

பதிப்பகத்தார்

[Paper used : White Printing D. Demy 14·5 kg.]



Kabeer Printing Works, Madras (1548)

# பொருளடக்கம்

## உரைநடைப் பாடம்



## செய்யுட் பாடம்

# தேசிய கீதம்

ஜன கண மன அதிநாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா
பஞ்சாப ஸிந்துகுஜ ராத மராட்டா
த்ராவிட உத்கல வங்கா
விந்திய ஹிமாசல யமுனா கங்கா
உச்சல ஜலதி தரங்கா
தவசுப நாமே ஜாகே
தவசுப ஆசிஷ மாகே
காயே தவஜய காதா
ஜன கண மங்கள தாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா
ஜயஹே ஜயஹே ஜயஹே
ஜய ஜய ஜய ஜயஹே!

—மகாகவி இரவீந்திரநாத தாகூர்

## பொருள்

இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற நீதான் மக்கள் எல்லாருடைய மனத்திலும் ஆட்சி செலுத்துகிறாய்.

நின் திருநாமம், பஞ்சாபையும் ஸிந்துவையும் குஜராத்தையும் மஹாராஷ்டிரத்தையும் திராவிடத்தையும் ஒரிஸாவையும் வங்காளத்தையும் உள்ளக் கிளர்ச்சி அடையச்செய்கிறது.

அது, விந்திய ஹிமாலய மலைகளில் எதிரொலிக்கிறது; யமுனை கங்கை நதிகளின் இன்ப நாதத்தில் கலக்கிறது; இந்தியக் கடல் அலைகளால் ஜபிக்கப்படுகிறது.

அவை நின் ஆசியை வேண்டுகின்றன; நின் புகழைப் பாடுகின்றன.

இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற உனக்கு

வெற்றி! வெற்றி! வெற்றி!

# தமிழ்த்தாய் வணக்கம்

நீராருங் கடலுடுத்த நிலமடந்தைக் கெழிலொழுகும்
சீராரும் வதனமெனத் திகழ்பரத கண்டமிதில்
தக்கசிறு பிறைநுதலும் தரித்தநறுந் திலகமுமே
தெக்கணமும் அதிற்சிறந்த திரவிடநல் திருநாடும்;
அத்திலக வாசனைபோல் அனைத்துலகும் இன்பமுற
எத்திசையும் புகழ்மணக்க இருந்தபெருந் தமிழணங்கே!
.........................................சிதையாஉன்
சீரிளமைத் திறம்வியந்து செயல்மறந்து வாழ்த்துதுமே!

—பெ. சுந்தரம் பிள்ளை

# சந்திரா தமிழ் உரைநூல்

## நான்காம் வகுப்பு

---

## 1.




### அருஞ்சொற்பொருள்

**சீராட்டும்** - செல்லம் கொஞ்சும்
**ஆண்டு** - வருடம்
**பிழை** - தவறு
**முத்தமிழ்** - இயல், இசை, நாடகம் எனும் மூன்று தமிழ்
**முச்சங்கம்** - தலை, இடை, கடை எனும் மூன்று சங்கம்
**பத்துப்பாட்டு** - திருமுருகாற்றுப் படை முதலிய 10 பாட்டு நூல்கள்
**எட்டுத்தொகை** - நற்றிணை முதலிய 8 தொகை நூல்கள்
**தொகை நூல்** - பலர் பாடிய பாடல்களைத் தொகுத்து வைத்துள்ள நூல்
**பதினெண் கீழ்க்கணக்கு** - நாலடியார் முதலிய 18 நூல்
**கீழ்க்கணக்கு** - 4 அடியும் அதற்குக் கீழுமுள்ள செய்யுள்களைக் கொண்ட நூல்
**நெறிகள்** - வழிகள்
**துறை** - பகுதி
**பரந்து** - பரவி

### வினா-விடை

**1. தாய்மொழியாவது யாது ?**

ஒருவர் தம் குழந்தைப் பருவம் முதல் அறிந்து பேசி வரும் மொழி தாய்மொழி. தாய் தன் குழந்தையோடு கொஞ்சும் மொழியே அக் குழந்தையின் தாய்மொழி.

**2. நாம் யார் ? நம் தாய்மொழி, நாடு எவை ?**

நாம் தமிழர். நமது தாய்மொழி தமிழ். நாம் வாழும் பகுதி தமிழ் நாடு.

**3. தாய்மொழி எத்தகையது ?**

தமிழ்மொழி பழமையானது. இது பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தோன்றியது; இலக்கியமும் இலக்கணமும் நிறைந்தது.

**4. இலக்கியம் என்பது யாது?**

அறிஞர்கள் தங்கள் எண்ணங்களைச் சுவைபட எழுதியிருப்பது இலக்கியம். இது செய்யுளாயும் இருக்கலாம்; உரைநடையாயும் இருக்கலாம்.

**5. இலக்கணம் என்பது எதற்குப் பெயர்?**

நாம் பிழையின்றித் திருத்தமாய்ப் பேசுவதற்கும் எழுதுவதற்கும் உரிய முறைகளையும் விதிகளையும் விளக்கிக் கூறுவது இலக்கணம்.

**6. முத்தமிழ் என்பவை எவை?**

இயல் தமிழ், இசைத் தமிழ், நாடகத் தமிழ் எனும் மூன்றும் முத்தமிழ் எனப்படும்.

**7. முச்சங்கம் என்பவை எவை?**

தமிழில் நூல்களை எழுதவும், எழுதிய நூல்களை ஆராய்ந்து பார்க்கவும் பழங்காலத்தில் தலைச் சங்கம், இடைச் சங்கம், கடைச் சங்கம் என மூன்று சங்கங்கள் இருந்தன. அவற்றை முச்சங்கம் என்பர்.

**8. பழைய நூல்களின் மூன்று தொகுதிகள் எவை?**

பழைய நூல்களின் மூன்று தொகுதிகள் பத்துப் பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க்கணக்கு ஆகும்.

**9. திருக்குறளின் சிறப்பைப்பற்றி நான்கு வாக்கியங்கள் எழுது.**

நாம் சிறப்பாக வாழ்வதற்கு வேண்டிய நீதிகளும்– நெறிகளும் திருக்குறளில் கூறப்பட்டுள்ளன. இது பல மொழிகளிலும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. இது இரண்டே வரிகள் கொண்ட 1330 பாட்டுகள் உள்ள தமிழ் மறை. இது உலக மக்களுக்குப் பொதுவான நூல்.

## இலக்கணம்

பின்வரும் சொற்களுள் ஒருமைக்குப் பன்மையும், பன்மைக்கு ஒருமையும் எழுது :

| பன்மை | | ஒருமை | ஒருமை | | பன்மை |
|---|---|---|---|---|---|
| நாடுகள் | — | நாடு | நகரம் | — | நகரங்கள் |
| நாள்கள் | — | நாள் | ஆடு | — | ஆடுகள் |
| சிறுவர் | — | சிறுவன் | பறவை | — | பறவைகள் |
| சிறுமியர் | — | சிறுமி | | | |

## 2.  பாரதிதாசனார்

### அருஞ்சொற்பொருள்

அமுது - சாவகற்றும் மருந்து
ஏற்றம் - உயர்வு
உள்ளம் - மனம்
விடுவிக்க - விடுதலை செய்ய
அரும்பாடு - அரிய முயற்சி
பெருமக்கள் - பெரியவர்கள்
அச்சுறுத்தல் - பயமுறுத்தல்
அடக்குமுறை - மக்களை அடக்கி ஆளுதல்
புகலடைதல் - பாதுகாப்பைப் பெறுதல்
கிளர்ந்து - தழைத்து
இயற்பெயர் - பெற்றோர் இட்ட பெயர்
புரையோடி - அழுகி
பகுத்தறிவு - நன்மை தீமைகளைப் பிரித்து அறியும் அறிவு
மரபு - முறைமை
கவிதை - பாட்டு
பரம்பரை - இடையறாத தொடர்பு
ஏறு போன்ற - காளை போன்ற
அஞ்சாமல் - பயப்படாமல்
மகளிர் - பெண்மக்கள்
மைந்தர் - மகன்
புலமை - கல்விச் சிறப்பு

### I. வினா-விடை

**1. பாரதிதாசன் எதனை உணர்ந்து எதனை வளரச் செய்தார் ?**

'தமிழின் ஏற்றமே தமிழன் வாழ்வு; தமிழ் நாட்டின் வாழ்வு' என்பதை உணர்ந்து தமிழைத் தம் உயிரென மதித்தார்; தம் இனிய கவிதைகள் மூலம் தமிழ் மக்களின் உள்ளங்களில் தாய்மொழிப் பற்றை வளரச் செய்தார்.

**2. இந்திய விடுதலைக்குப் பாடுபட்டவர்களுள் இருவர் பெயரை எழுது.**

காந்தியடிகள், வ. உ. சிதம்பரனார் ஆகியோர் இந்திய விடுதலைக்குப் பாடுபட்ட பெருமக்களுள் இருவர்.

**3. கவிதைகள் மூலம் நாட்டுப்பற்றை எழச்செய்தவர் எவர் ?**

ஆங்கில ஆட்சியின் அடக்குமுறைக்கு அஞ்சிப் பாண்டிச்சேரிக்குச் சென்று புகலடைந்தவர்களுள் தேசியக் கவிஞர் சுப்பிரமணிய பாரதியார் ஒருவர். அவர் தம் கவிதைகளின் மூலம் நாட்டு மக்களிடம் நாட்டுப் பற்றை மிகுதியாகக் கிளர்ந்து எழச் செய்தார்.

4. பாரதிதாசனுர் என்னும் பெயர் வழங்கக் காரணம் என்ன ?

பாரதிதாசனுரின் இயற்பெயர் கனக சுப்புரத்தினம் என்பது. அவர் பாரதியாரைத் தம் ஆசிரியராகக் கொண்டு கவிதைகள் எழுதத் தொடங்கினுர். அவர் பாரதியாரிடம் கொண்டிருந்த அன்பு காரணமாகத் தம் பெயரைப் பாரதி தாசனுர் என்று மாற்றி அமைத்துக்கொண்டார்.

5. பாரதிதாசனுர் தம் கவிதை மூலம் பரப்பிய கருத்துகள் எவை ?

"மக்களிடையே புரையோடிக் கிடக்கும் மூடநம்பிக் கைகள் ஒழியவேண்டும். பணக்காரன் ஏழை என்னும் உயர்வு தாழ்வு நீங்கவேண்டும். பெண்ணடிமை தீர வேண்டும். பகுத்தறிவுக் கருத்துகள் மக்களிடத்தில் பரவவேண்டும். இவையெல்லாம் நடந்தால்தான் நாட்டின் இழிவு தீரும்" என்னும் கருத்துகளைப் பாரதிதாசனுர் தம் கவிதைமூலம் பரப்பினுர்.

6. பாரதிதாசனுர் தமிழ் மக்களைப் பார்த்து என்ன கேட்பார் ?

அவர் செந்தமிழுக்குத் தீங்குவந்தால் பொறுக்க மாட்டார். "இந்தத் தீங்கைத் தடுத்து நிறுத்தாவிடில், இவ்வுடல் இருந்து பயன் உண்டா?" எனத் தமிழ் மக்களைப் பார்த்துக் கேட்பார்.

7. பாரதிதாசனுர் இயற்றிய நூல்களின் பெயரை எழுது.

பாரதிதாசனுர் கவிதைகள், குடும்பவிளக்கு, அழகின் சிரிப்பு, பாண்டியன் பரிசு, இளைஞர் இலக்கியம் முதலிய பல கவிதை நூல்களை அவர் இயற்றியுள்ளார்.

8. இன்றைய புதுவை அரசு, பாரதிதாசனுர் நினைவை எவ்வாறு போற்றுகிறது ?

பாரதிதாசனுர் 73ஆம் வயதில் இறந்தார். இன்றைய புதுவை அரசு, அவர் குடியிருந்த வீட்டை வாங்கி, நாட்டுக்குப் பொதுச் சொத்து ஆக்கியுள்ளது; ஆண்டு தோறும் அவருக்குச் சிறப்புவிழா நடத்துகிறது.

II. எதிர்ச்சொற்கள் எழுது :

| | |
|---|---|
| இனிய × இன்னுத | மிகுதி × குறைவு |
| உள்ள × இல்லாத | உயர்வு × தாழ்வு |

III. பிரித்தெழுது :

| | | |
|---|---|---|
| அழுதென்று | = | அமுது என்று |
| உயிரென | = | உயிர் என |
| அங்கிருந்து | = | அங்கு இருந்து |
| இயற்பெயர் | = | இயல் பெயர் |
| பெண்ணடிமை | = | பெண் அடிமை |
| புகலடைந்தவர்கள் | = | புகல் அடைந்தவர்கள் |

IV. சேர்த்தெழுது :

| | | | |
|---|---|---|---|
| தாய்மொழி | + பற்று | = | தாய்மொழிப்பற்று |
| நாட்டு | + பற்று | = | நாட்டுப்பற்று |
| தமிழ் | + கவிதை | = | தமிழ்க்கவிதை |
| வர | + கூறி | = | வரக்கூறி |
| எழுத | + தொடங்கினர் | = | எழுதத்தொடங்கினர் |

## இலக்கணம்

I. கீழ்வரும் வாக்கியங்களிலிருந்து பொருட்பெயர்களை யும் இடப்பெயர்களையும் எடுத்து எழுது :

| | | | |
|---|---|---|---|
| வாக்கியம் | 1. | மழை, நெல் | — பொருட்பெயர்கள் |
| | | வயல் | — இடப்பெயர் |
| ,, | 2. | மக்கள் | — பொருட்பெயர் |
| | | சென்னை | — இடப்பெயர் |
| ,, | 3. | மலை | — பொருட்பெயர் |
| | | இமய மலை | — பொருட்பெயர் |
| | | உலகம் | — இடப்பெயர் |

II. வேறு பொருட்பெயர் இரண்டும் இடப்பெயர் இரண்டும் எழுது :

1. கவிதை, கரும்பு — பொருட் பெயர்
2. நாடு, பள்ளிக்கூடம் — இடப் பெயர்

# 3. யானைக்கும் பானைக்கும் சரி



## அருஞ்சொற்பொருள்

**நிலக்கிழார்** - நிலத்துக்கு உரியவர்
**வளம்** - செழிப்பு
**நன்செய்** - நெல் விளையும் வயல்
**புன்செய்** - கேழ்வரகு முதலிய பயிர்கள் விளையும் வயல்
**செய்** - வயல், நிலம்
**வருவாய்** - வருமானம்

பண்பு - குணம்
ஊர்வலம் - ஊரை வலப்பக்கம் சுற்றி வருதல்
அரபு வணிகர் - அரேபியா நாட்டைச் சேர்ந்த வியாபாரி
பிடிவாதமாய் - விடாப் பிடியாய்
இயலாது - முடியாது
நடுவர் - நீதிபதி
இருசாரார் - இரு பக்கத்தவர் (வாதி, பிரதிவாதிகள்)
தீர்ப்பு - முடிவு
சுக்கு நூறய் - பல துண்டுகளாய்
விரைந்து - விரைவாக
அரியவை - அருமையானவை
அறமுறை - ஒழுங்கு முறை
நெறி - வழி
சரி - ஒப்பு

## I. வினு-விடை

**1. அழகப்பர் யார்?**

அழகப்பர் பெரிய நிலக்கிழார். அவருக்கு வளம் மிகுந்த நன்செய் புன்செய்களும், தென்னந்தோப்புகளும், வாழைத் தோட்டங்களும் இருந்தன. இவற்றினுல் அவருக்குப் பெரு வருவாய் கிடைத்தது.

**2. அவருக்கு யானை ஏன் தேவைப்பட்டது?**

அழகப்பருக்குச் செழியன் என்னும் ஒரே மகன் இருந்தான். அவன் மணப்பருவம் அடைந்தான். அழகப்பர் அவனுக்குச் சிறப்பாய்த் திருமணம் நடத்த எண்ணினுர்; யானையுடன் ஊர்வலம் நடத்த முடிவு செய்தார்.

**3. அழகப்பர் யானையை எப்படிப் பெற்ருர்? முடிவில் அது என்ன ஆயிற்று?**

அழகப்பர் வாழ்ந்த ஊரில் அரபு நாட்டு வணிகர் ஒருவர் இருந்தார். அவரிடம் ஒரு யானை இருந்தது. அவரிடமிருந்து யானையை அழகப்பர் இரவலாக வாங்கினுர்; திருமண ஊர்வலத்தைச் சிறப்பாக நடத்திஞர். ஆனுல் ஊர்வலத்தின் முடிவில் யானை இறந்தது.

**4. அழகப்பர் தாம் இரவலாகப் பெற்ற யானை இறந்ததைக் குறித்து அரபு வணிகரிடம் முதலில் கூறியது யாது?**

அழகப்பர், யானை இறந்து விட்டதற்கு அரபு வணிகரிடம் வருத்தம் தெரிவித்து, "ஐயா! திடீரென உமது யானை செத்து விட்டது. அதற்குரிய விலை எதுவாஞலும் உமக்குக் கொடுத்து விடுகிறேன். நீங்கள் வருத்தப்பட வேண்டியதில்லை" என்று கூறினுர்.

**5. அழகப்பருக்கு அரபு வணிகர் கூறிய மறுமொழி யாது?**

அரபு வணிகர், "நீங்கள் கூறுவதை நான் ஏற்றுக்

கொள்ளமாட்டேன். என் யானையே எனக்கு வேண்டும்" என்று அழகப்பரிடம் கூறினர்.

**6. அரபு வணிகர் நீதிமன்றம் சென்றதேன்?**

"ஐயா நீங்கள் சொல்வது பொருத்தமாய் இல்லை. செத்த யானையை உயிர்ப்பித்துத் தருதல் இயலாதே!" என்று அழகப்பர் கூறியதால், அரபு வணிகர் நீதிமன்றம் சென்று அழகப்பர் மீது வழக்குத் தொடுத்தார்.

**7. நடுவரான மரியாதைராமன் என்ன செய்தார்?**

நடுவரான மரியாதைராமன் இருசாராரின் முறையீட்டையும் கேட்டு அறிந்து, "நாளை நீங்கள் நீதிமன்றத்திற்கு வரவேண்டும்; நான் தீர்ப்புக் கூறுவேன்" என்று சொல்லி இருவரையும் அனுப்பி விட்டார்.

**8. மரியாதைராமன் அழகப்பருக்குச் சொல்லிக் கொடுத்த தந்திரம் யாது?**

மரியாதை ராமன் அழகப்பரை மட்டும் தனியே அழைத்து, "ஐயா, நாளைக்கு அரபு வணிகரை அனுப்பி உம்மை அழைப்பேன். நீர் உமது வீட்டிலுள்ள தெருக் கதவை மூடி அதன் பின்புறம் பெரிய பழைய பானைகளை அடுக்கி வையுங்கள். உம்மை அழைக்க வரும் அரபு வணிகர் தெருக்கதவை விரைவாய்த் திறப்பார். அப்போது பழம்பானைகள் சரிந்து விழுந்து உடையும். நீர் உடனே வந்து, அந்த அரபு வணிகர் மீது வழக்குத் தொடுக்க வேண்டும்" என்று ஒரு தந்திரம் கூறினர்.

**9. அழகப்பர் அரபு வணிகர் மீது எப்படி வழக்குத் தொடர்ந்தார்?**

அழகப்பர் மரியாதை ராமன் சொல்லியபடி செய்தார். மறுநாள், அரபு வணிகர் அழகப்பர் வீட்டை அடைந்து தெருக் கதவைத் திறந்தார். பழம்பானைகள் உடைந்து போயின. அழகப்பர் நீதிமன்றம் சென்று, நடுவரை நோக்கி, "நடுவர் அவர்களே! என் வீட்டுக் கதவருகில் பானைகளை அடுக்கி வைத்திருந்தேன். அவை பல தலைமுறையாய்ப் பாதுகாக்கப்பட்டவை; கிடைப்பதற்கு அரியவை. அவற்றை இந்த வணிகர் உடைத்து விட்டார். உடைந்து போன அந்த அருமையான பானைகளை எனக்குத் திருப்பித் தருமாறு அரபு வணிகருக்குக் கட்டளையிடுமாறு வேண்டுகிறேன்" என்று கூறினர்.

**10. வழக்கில் ஏற்பட்ட தீர்ப்பு என்ன?**

நடுவர், வணிகரை நோக்கி, "அரபு வணிகரே! நீர் அந்தப் பழம்பானைகளை உடையாத நிலையில் திருப்பித் தரவேண்டும். அப்படிக் கொடுத்தால், செத்துப் போன உமது யானையை அழகப்பர் உயிர்ப்பித்து உமக்குக் கொடுப்பார்" என்று தீர்ப்புக் கூறினார்.

**11. அரபு வணிகர் செய்த முடிவு யாது?**

தீர்ப்பைக் கேட்ட அரபு வணிகர், "நடுவர் அவர்களே! என் யானைக்கும் இவர் பானைக்கும் சரியாய் விட்டது" என்று கூறித் தம் வீடு சென்றார்.

**12. இக்கதையால் விளங்கும் உன் கருத்தை எழுது.**

"வீண் பிடிவாதம் செய்வதோ, பேராசை கொள்வதோ கூடாது. அதனால் நன்மை உண்டாகாது. அறிவைப் பயன்படுத்தி நியாயமாக நடந்து கொள்ள வேண்டும்" என்பது இந்தக் கதையிலிருந்து விளங்குகிறது. அரபு வணிகர் யானைக்குரிய விலையை வாங்கிக் கொண்டிருக்கலாம். மூடப் பிடிவாதம் செய்ததால் ஒன்றுமில்லாமல் போனார். அறிவை வளர்த்துக் கொள்வதால் எந்தவிதமான சிக்கலையும் எளிதில் தீர்த்து வைக்க முடியும் என்பதும் இந்தக் கதையிலிருந்து விளங்குகிறது.

**II. பிரித்து எழுது:**

| | |
|---|---|
| வேண்டுவதில்லை | = வேண்டுவது இல்லை |
| வீட்டிலுள்ள | = வீட்டில் உள்ள |
| வைத்திருந்த | = வைத்து இருந்த |
| சிற்சில | = சில் சில (சிலசில) |
| பற்பல | = பல் பல (பலபல) |
| ஒவ்வொரு | = ஒரு ஒரு |

**III. சேர்த்து எழுது:**

| | | |
|---|---|---|
| வாழை | + தோட்டம் | = வாழைத்தோட்டம் |
| வாழை | + குலைகள் | = வாழைக்குலைகள் |
| வாங்கி | + தருகிறேன் | = வாங்கித்தருகிறேன் |
| மணம் | + பருவம் | = மணப்பருவம் |
| கவனித்து | + கொள்வேன் | = கவனித்துக்கொள்வேன் |
| யானையை | + தருவது | = யானையைத்தருவது |
| எனக்கு | + திருப்பி | = எனக்குத்திருப்பி |
| செத்து | + போன | = செத்துப்போன |

## இலக்கணம்

I. கீழ்வரும் வாக்கியங்களில் உள்ள காலப் பெயர்களை எடுத்தெழுது :

| | | |
|---|---|---|
| வாக்கியம் | 1. ஆண்டுகள். | இவை காலப் பெயர்கள். |
| ,, | 2. இரவு, பகல், நாள். | |
| ,, | 3. சித்திரை, வைகாசி, இளவேனிற்காலம். | |
| ,, | 4. ஆனி, ஆடி, முதுவேனிற்காலம். | |

II. கீழ்வரும் வாக்கியங்களில் இருக்கும் சினைப் பெயர்களை எடுத்தெழுது :

| | | |
|---|---|---|
| வாக்கியம் | 1. கிளை, பூ, பிஞ்சு. | இவை சினைப் பெயர்கள். |
| ,, | 2. கை, மூடி. | |
| ,, | 3. அலகு, மாங்காய். | |

# 4.  மூடர் மூவர்

(பாட்டு)

### அருஞ்சொற்பொருள்

வெள்ளி - சுக்கிரன்
புள் - பறவை
வெள்ளெலி - வெள்ளை நிற எலி
உரைசெய்த - சொன்ன
உடும்பு - பல்லி வகையைச் சேர்ந்த ஓர் ஊரும் பிராணி
நேயன் - நண்பன்
சிற்றெலி - சிறிய எலி
சற்றும் - சிறிதும்
சாற்றி - சொல்லி
நகைத்து - சிரித்து
வாலைக் குழைத்து - வாலை ஆட்டிக்கொண்டு
போக்குவர் - கழிப்பர்

### வினா-விடை

**இந்தப் பாட்டினை உரைநடையில் எழுது :**

வெள்ளி முளைக்கும் வேளையில் (பொழுது விடிவதற்குச் சிறிது முன்), சோலையில் பறவைகள் இசை பாடும் நேரத்தில் மொட்டையன் எழுந்து வெளியில் வந்தான். அவன் வெள்ளெலி ஒன்றைப் பார்த்தான்.

அவன் தட்டுத்தடுமாறி உள்ளே சென்று, தூங்கிக் கொண்டிருந்த கட்டையனைத் தட்டி எழுப்பி, "கட்டையா! வெள்ளெலி பார்த்திருக்கிறாயா?" என்று கேட்டான்.

கட்டையன், "காது குடைய அதிலிருந்து ஓர் இறகு பிடுங்கி வா!" என்று சொன்னான். "அதில் ஏது இறகு? உனக்குப் புத்தியும் கட்டையடா. அது என்ன உடும்பா இறகு எடுத்துவர?" என்று மொட்டையன் சொன்னான்.

இப்படிச் சொன்ன மொட்டையனைக் கட்டையன் ஒன்றும் தெரியாத மூடன் என்றான். இந்த இருவரும் பேசியதைக் கேட்ட இவர்களுடைய நண்பன் குட்டை குதித்து எழுந்து அங்கு வந்தான்.

"சிறிதும் அறிவில்லா மூடர்களே! நீங்கள் இருவரும் சிற்றெலியோடு உடும்பையும் சேர்த்து முயல் என்று நினைத்துக் கொண்டீர்களோ?" என்று சொல்லிச் சிரித்தான்.

அந்தச் சமயம் எலி வாலை ஆட்டிக்கொண்டு அங்கு வரவே, அவர்கள் மூலைக்கு ஒருவராய் ஓடிவிட்டார்கள்.

நண்பர்களே! வேலையில்லாத மூடர்கள், இப்படித் தான் வீண் காலம் கழிப்பார்கள்.

## 5.  வானொலி

### அருஞ்சொற்பொருள்

| | |
|---|---|
| சாந்தோம் - சென்னை மயிலாப்பூரின் கிழக்குப் பகுதி | மகிழ்கிறோம் - சந்தோஷம் அடைகிறோம் |
| ஒலி - ஓசை | வியப்பு - ஆச்சரியம் |
| புகாதபடி - நுழையாதபடி | அஞ்சல் - ஒலிபரப்பு |

### வினா-விடை

**1. வானொலியைக் கண்டுபிடித்தவர் யார்? அவர் எந்த நாட்டினர்?**

வானொலியைக் கண்டுபிடித்தவர் மார்க்கோனி என்பவர். அவர் இத்தாலி நாட்டினர்.

**2. நம் நாட்டில் வானொலி நிலையங்கள் எங்கெங்கே இருக்கின்றன?**

வானொலி நிலையங்கள் நம் நாட்டில், தமிழகத்தில் சென்னை, திருச்சிராப்பள்ளி, கோயமுத்தூர், திருநெல்வேலி என்னும் நகரங்களிலும், புதுச்சேரியிலும், தில்லி, பம்பாய், கல்கத்தா முதலிய நகரங்களிலும் உண்டு.

**3. சென்னையில் வானொலி நிலையம் எங்குள்ளது?**

சென்னையில், சாந்தோம் என்னும் இடத்தில் வானொலி நிலையம் இருக்கிறது. அங்கு வானொலிக் கருவி அமைக்கப்பட்டு இருக்கிறது. அங்கிருந்துதான் நாம் கேட்கும் பாட்டு, செய்தி முதலியவை வருகின்றன.

**4. வானொலிப் பாட்டோ, செய்தியோ எவ்வாறு பரப்பப்படுகிறது?**

வானொலி நிலையத்தில் வெளி ஒலி நுழையாதபடி ஒலி பரப்பும் அறைகள் கட்டப்பட்டுள்ளன. ஒவ்வோர் அறையிலும் ஒவ்வோர் ஒலி பரப்பும் கருவி இருக்கிறது. அது தன் முன்னே பேசும் பேச்சிலோ, பாடும் பாட்டிலோ தோன்றும் ஒலிகளை மின்காந்த அலைகளாய் மாற்றிக் காற்றில் சேர்க்கின்றது. வானத்தில் பரவியுள்ள காற்று இந்த மின்காந்த அலைகளை எங்கும் பரப்புகிறது.

**5. காற்றில் பரவியுள்ள மின்காந்த அலைகளை நாம் எப்படிக் கேட்க முடிகிறது?**

வானத்தில் காற்றில் மிதந்துவரும் மின்காந்த அலைகளை வாங்கி மீண்டும் ஒலியாக மாற்றுவதற்குச் சில கருவிகள் நமது வானொலிப் பெட்டியில் உள்ளன. அக் கருவிகள் மின்காந்த அலைகளை வாங்கி மீண்டும் பேச்சாகவோ, பாட்டாகவோ மாற்றி நாம் கேட்குமாறு செய்கின்றன. வானொலிப் பெட்டி என்பது வானொலியை வாங்கும் கருவியேயாகும்.

**6. வானொலியால் மக்களுக்கு ஏற்படும் நன்மைகள் யாவை?**

வானொலியால் பல நன்மைகள் ஏற்படுகின்றன. கப்பல் கடலில் மூழ்கும் நிலையில் இருந்தால், கப்பல் தலைவர், கப்பல் ஆபத்தில் இருப்பதை அருகிலுள்ள வானொலி நிலையங்களுக்கு அறிவிப்பார். உடனே அவருக்கு உதவி கிடைக்கும்.

**II. புள்ளியிட்ட இடங்களைத் தக்க சொற்களால் நிரப்பு:**

1. வானத்தில் **மின்காந்த** அலைகள் **காற்றில்** மிதந்துகொண்டிருக்கின்றன.

2. வேறு பல **நன்மைகளுக்கும்** வானொலி **பயன்படுகிறது**.

**III. பிரித்தெழுது :**

வானொலி = வான் ஒலி
வெவ்வேறு = வேறு வேறு
எங்கெங்கே = எங்கு எங்கே

**IV. சேர்த்தெழுது :**

இப்படி + செய்வது = இப்படிச்செய்வது
எப்படி + கேட்பாய் = எப்படிக்கேட்பாய்
அந்த + பாட்டு = அந்தப்பாட்டு
எந்த + கதை = எந்தக்கதை

### இலக்கணம்

I. கீழ் வருவனவற்றுள் பண்புப் பெயர்களை மட்டும் எடுத்து எழுது: தஞ்சாவூர், நன்மை, தீமை, இருள், ஆண்டு, அழகு.

நன்மை, தீமை, இருள், அழகு—பண்புப் பெயர்கள்.

II. கீழ்க்காணும் வாக்கியங்களில் உள்ள தொழிற்பெயர் களை மட்டும் எடுத்தெழுது :

வாக்கியம் 1. பேசுதல்
,, 2. பாடுதல், சொல்லுதல், விளையாடுதல், உரையாடல், நிகழ்ச்சி

} இவை தொழிற் பெயர்கள்.

## 6.  புத்தரும் ஆயர் குலச் சிறுவனும்

(பாட்டு)

### அருஞ்சொற்பொருள்

ஆயர் - இடையர்
வையகம் - உலகம்
மாதவம் - பெரிய தவம்
உள்ளம் - மனம்
வள்ளல் - வள்ளலாகிய புத்த பிரான்
மயக்கு - மயக்கம்
ஐயன் - தலைவராகிய புத்த பிரான்
அரிய - அருமையான
களங்கம் - குற்றம்
இலா - இல்லாத
உளத்தான் - மனம் உடையவன்
கலம் - மண்பாண்டம்
அண்ணல் - பெரியவர்
தீண்டவொண்ணு - தொடத் தகாத
உதிரம் - இரத்தம்
உவர்ப்பு - உப்புச் சுவை
நாடும் - விரும்பும்
தின்மை - தீமை

| | |
|---|---|
| அண்டி - நெருங்கி | நிகழ்த்தி - சொல்லி |
| நிலத்து - பூமியில் | தாயினும் - பெற்றவளைவிட |
| உயர் ஞானி - உயர்ந்த ஞான முடைய புத்த பெருமான் | இனியன் - நல்லவன் |

## வினு-விடை

**1. ஆயர்குலச் சிறுவன் தழைகளை ஏன் நட்டான்?**

ஆடு மேய்த்துவரும் இடைச் சிறுவன் ஒருவன், போகும் வழியில் வாடிக்கிடந்த புத்தரைப் பார்த்தான். அவர் உலகம் வாழப்பிறந்த பெருந்தவச் செல்வர். ஆகையால், அவர் முகம் வெயிலில் வெந்திடாமல் தழைகளை வெட்டி அருகில் நட்டான்.

**2. புத்தர் மயக்கம் நீங்க ஆயர்குலச் சிறுவன் செய்தது என்ன?**

குற்றமிலா மனமுடைய ஆயர்குலச் சிறுவன், வெள்ளாடு ஒன்றை அழைத்துவந்து, வள்ளலாகிய புத்தருடைய மயக்கம் நீங்குமாறு அதன் மடியிலிருந்து பாலை அவர் வாயில் கறந்து விட்டான்.

**3. புத்தர் ஆயர்குலச் சிறுவனிடம் என்ன கேட்டார்?**

தரைமீது மயங்கிக்கிடந்த புத்தர், மெல்ல நிமிர்ந்து பார்த்து, "கலயத்தில் சிறிது பால் கறந்து கொடு" என்று ஆயர்குலச் சிறுவனிடம் கேட்டார்.

**4. கலயத்தில் பால்தரக் கேட்ட புத்தருக்குச் சிறுவன் கூறியது யாது?**

ஆயர்குலச் சிறுவன், "ஐயையோ அண்ணலே! கலயத்தில் பால் தரக்கூடாதே! நான் உன்னைக் கையினுல் தொடத்தகாத காட்டு மனிதனுகிய இடையன்" என்று கூறினுன்.

**5. ஆயர்குலச் சிறுவனுக்குப் புத்தர் என்ன கூறினுர்?**

"அப்பா! உடம்பில் ஓடும் இரத்தத்திலோ, கண்ணில் வடிந்து ஒழுகும் கண்ணீரிலோ தேடிப்பார்த்தாலும் சாதி தெரிவதுண்டா? எவர் உடம்பிலும் இரத்தம் சிவப்பு நிறம்தான். எவர் கண்ணீரும் உப்புச் சுவைதான். இதுதான் இயற்கை. இவ்வுலகில் எவருக்கும் பிறப்பினுல் பெருமை வாராது. நன்மை செய்பவர்களே உலகம் விரும்பும் மேல் குலத்தவர். தீமை செய்பவர்களே தொடத் தகாதவர் ஆவர்" என்று புத்தர் சிறுவனிடம் கூறினுர்.

**6. இப்பாடம் கற்பிக்கும் நீதி யாது?**

இவ்வுலகில் பிறப்பால் எவர்க்கும் பெருமையில்லை. சாதி என்பதே உலகில் கிடையாது. நன்மை செய்பவர் மேல் குலத்தவர். தீமை செய்பவரே தீண்டத்தகாதவர் என்னும் உண்மையே இப்பாடம் கற்பிக்கும் நீதியாகும்.

## 7. வால்கள்



### அருஞ்சொற்பொருள்

உயிரினங்கள் - பிராணிகள்
குஞ்சம் - குச்சு
தொல்லை - துன்பம்
நுனியில் - முனையில்
ஊசல் - ஊஞ்சல்
சினம் - கோபம்
குழைக்கிறது - ஆட்டுகிறது
அச்சம் - பயம்

### I. வினா-விடை

**1. வால் உள்ள உயிரினங்கள் எவை?**

விலங்குகள், மீன்கள், பறவைகள் முதலியவைகளுக்கும் வேறு பல உயிரினங்களுக்கும் வால்கள் இருக்கின்றன.

**2. மாட்டுக்கும் குதிரைக்கும் ஏன் வால் நீண்டிருக்கிறது?**

மாடு தன் நீண்ட வாலை ஆட்டி அதன் நுனியில் இருக்கும் மயிர்க் குஞ்சத்தால் தன்மேல் உட்கார்ந்து துன்பமுண்டாக்கும் ஈக்கள் முதலியவற்றை ஓட்டும். மயிர் அடர்ந்து நீண்டிருக்கும் வாலையுடைய குதிரைக்கும், ஈ, கொசு முதலியவற்றை ஓட்டவே வால் பயன்படுகிறது.

**3. பன்றிக்கும் யானைக்கும் ஏன் வால் குட்டையாய் இருக்கிறது?**

பன்றிக்கும் யானைக்கும் தோல் தடிப்பானது. ஆதலால் கொசு முதலியவற்றால் அவற்றுக்குத் துன்பம் உண்டாகாது. ஆகையால், அவற்றிற்கு வால் குட்டையாய் அமைந்திருக்கிறது.

**4. குரங்குக்கு நீண்ட வால் இருப்பதன் பயன் யாது?**

குரங்குக்கு நீண்ட வால், அது மரத்தைப் பிடித்துக் கொள்ள உதவுகிறது. குரங்கு தன் வாலைக் கிளையில்

சுற்றிக்கொண்டு தலைகீழாய்த் தொங்கி ஊசலாடுவது போல் ஆடி முன்னங்கால்களால் வேறு கிளைகளைப் பற்றி மரத்துக்கு மரம் தாவும்.

**5. அணிலுக்கும் எலிக்கும் வால் எப்படிப் பயன்படுகிறது?**

அணிலின் வால், அது கிளைகளிலிருந்து விழாமல் நிலையாய் உட்காருவதற்குப் பயன்படுகிறது. எலிக்கும் அதன் வால் அவ்வாறே பயன்படுகிறது. அணில் மரங்களில் வாழ்வதால், அதன் வால் எலியின் வாலைவிடச் சிறிது வளர்ந்து மயிர் அடர்ந்திருக்கிறது.

**6. பல்லிக்கும் அரணைக்கும் வால் எவ்விதம் பயன்படுகிறது?**

பல்லிக்கும் அரணைக்கும் வால் எளிதில் அறுந்து விடும். பகைப் பிராணிகள் இவற்றைப் பிடிக்கும்போது, இவை வாலை அறுத்துவிட்டு ஓடிவிடும்.

**7. நாய் தன் உணர்ச்சியை எப்படிக் காட்டுகிறது? விளக்கி எழுது.**

நாய் தன் மகிழ்ச்சியையும், சினத்தையும் காட்டத் தன் வாலைப் பயன்படுத்துகிறது. கோபத்தைக் காட்ட அது தன் காதை நிமிர்த்தி வாலை நேராக உயர்த்துகிறது. அன்பைக் காட்ட வாலைக் குழைக்கிறது. அச்சத்தைக் காட்டத் தன் வாலைப் பின்னங்கால்களுக்கு நடுவிலே மடக்குகிறது.

**8. மீன்களுக்கும் பறவைகளுக்கும் வால் எப்படிப் பயன்படுகிறது?**

மீனுக்கு வால் நீந்துவதற்குப் பயன்படுகிறது. பறவைக்கு வால் பறக்க உதவுகிறது. பறவை வானத்தில் பறக்கும் போது மேலே உயரவும், கீழே இறங்கவும், பக்கங்களில் திரும்பவும் அதன் வால் உதவுகிறது.

**II. எதிர்ச்சொற்கள் எழுது:**

| | |
|---|---|
| குட்டை × நெட்டை | மகிழ்ச்சி × வருத்தம் |
| நேராக × குறுக்காக | சிறிது × பெரிது |

**III. பிரித்தெழுது:**

நீண்டிருக்கும் = நீண்டு இருக்கும்
வெண்ணிறம் = வெண்மை நிறம்
பற்பல = பல்பல (பலபல)
கிளைகளிலிருந்து = கிளைகளில் இருந்து

### இலக்கணம்

I. கீழ்வரும் வாக்கியங்களில் உள்ள வினைச் சொற்களை எடுத்தெழுது :

வாக்கியம் 1. உட்கார்ந்து, துன்புறுத்தும், ஓட்டும்.
,, 2. இருக்கும்.
,, 3. பிடித்துக்கொள்ள உதவுகிறது.
,, 4. காட்டுகிறது.

II. இந்தப் பாடத்திலிருந்து வேறு நான்கு வினைச் சொற்களை எடுத்து எழுது.

அமைகிறது ; காணலாம் ; கொடுக்கும் ; ஓட்டும்.

## 8.  கரும்பு

### அருஞ்சொற்பொருள்

நீர்ப்பாசன வசதி - நீர் பாய்ச்சும் வசதி
பட்டம் - கரும்பு பயிரிட அமைக்கும் நாற்றங்கால் அமைப்பு
களை - பயிரைக் கெடுக்கும் புல் முதலியவை
உரம் - எரு
தோகை - கரும்பின் உச்சியில் இருக்கும் இதழ்கள்
இயக்கப்பட்டன - நடத்தப் பட்டன
கொப்பரை - கரும்புச் சாற்றைக் காய்ச்சும் பாத்திரம்
தூய்மைப்படுத்தி - சுத்தப் படுத்தி

### I. வினா-விடை

**1. கரும்பு எவ்விடங்களில் பயிராகும்?**

கரும்பு நன்செய் நிலத்தில் பயிராகும். நீர்ப்பாசன வசதி உள்ள இடங்களில் கரும்பு பயிர் செய்யப்படும்.

**2. பட்டங்களில் கரும்பு எப்படி நடப்படுகிறது?**

வயலை நன்றாக உழுது சிறு சிறு பட்டங்கள் வெட்டி அமைக்கப்படும். இப் பட்டங்கள் கிடங்குகள் என்றும் கூறப்படும். கரும்பு ஒரு சாண் அளவுள்ள துண்டுகளாக நறுக்கப்படும். ஒவ்வொரு துண்டிலும் ஒவ்வொரு கணு இருக்கும். அந்தத் துண்டுகளை வயலில் அமைக்கப் பட்டுள்ள பட்டங்களில் நடுவார்கள்.

**3. கரும்பு எப்படி வளர்கிறது ?**

கரும்பு சிறிது வளர்ந்ததும் களை எடுப்பார்கள். நன்றாக வளரக் கரும்புக்கு உரம் இடுவார்கள். கரும்பு நுனியில் பசுமை நிறத் தோகை விட்டு நன்றாக வளரும். சிறந்த கரும்புகள் இரண்டரை மீட்டர் உயரத்திற்கு மேலும் வளரும். முற்றிய கரும்பின் நுனியில் பூக்கள் உண்டாகும். கரும்பின் அடி முதல் நுனி வரை இடை யிடையே கணுக்கள் இருக்கும்.

**4. சர்க்கரை செய்வது எப்படி ?**

முற்றிய கரும்பை ஆலையில் இட்டுச் சாறு பிழி வார்கள். கொப்பரையைப் பெரிய அடுப்பில் ஏற்றி, அதில் கருப்பஞ்சாற்றை ஊற்றிக் காய்ச்சுவார்கள். அது பாகு பதத்தை அடையும். அதை அச்சுகளில் ஊற்றி வெல்லம் ஆக்குவார்கள். பாகைத் தொட்டியில் ஊற்றித் தேய்த்துச் சர்க்கரையாகவும் செய்வார்கள்.

**5. வெள்ளைச் சர்க்கரை எவ்வாறு செய்யப்படும் ?**

பல கரும்புகளை இயந்திரத்தில் இடுவார்கள். அந்த இயந்திரம் அக்கரும்புகளைத் துண்டு துண்டாக வெட்டி அடுத்த இயந்திரத்திற்குள் தள்ளும். அத்துண்டுகளி லிருந்து சாறு பிழியப்பட்டதும் சக்கை வெளியில் தள்ளப்படும். சாற்றைக் காய்ச்சித் தூய்மைப்படுத்தி வெள்ளைச் சர்க்கரை செய்வார்கள்.

**II. சேர்த்தெழுது :**

சாற்றை + தீயில் = சாற்றைத்தீயில்
வளர்வதற்கு + கரும்பு = வளர்வதற்குக்கரும்பு
அவனை + கண்டான் = அவனைக்கண்டான்
வீட்டிற்கு + போனான் = வீட்டிற்குப்போனான்

**III. பிரித்தெழுது :**

ஒவ்வொன்று = ஒன்று ஒன்று
இவ்விரண்டு = இரண்டு இரண்டு
மும்மூன்று = மூன்று மூன்று
நந்நான்கு = நான்கு நான்கு
ஐவைந்து = ஐந்து ஐந்து
அவ்வாறு = ஆறு ஆறு
எவ்வேழு = ஏழு ஏழு

# 9. கூட்டுறவுச் சங்கம்



### அருஞ்சொற்பொருள்

எளிதாக - சுலபமாக
உறுப்பினர் - அங்கத்தினர்
மூலதனம் முதற்பொருள்
வேளாண்மை - பயிர்த்தொழில்
வாணிகம் - வியாபாரம்
துறைகளுக்கும் - பிரிவுகளுக்கும்
பண்டசாலை - பொருள்களைத் திரட்டிவைக்கும் இடம்
உழவுத் தொழில் - பயிர்த் தொழில்
மனை - வீடு கட்டும் இடம்
நிதி - செல்வம்
திரட்டி - தொகுத்து
பணி - வேலை
கிட்டும் - கிடைக்கும்
பகிர்ந்து - பங்கிட்டு
இயலாத - முடியாத

### வினா-விடை

**1. கூட்டுறவுச் சங்கம் என்பது எதற்குப் பெயர் ?**

பலர் கூடி ஒரு செயலைச் செய்வதே கூட்டுறவு என்பது. ஓர் ஊருக்கு வேண்டிய நன்மைகளைக் கூட்டுறவு முறையில் எவரும் எளிதாகச் செய்யலாம். கூட்டுறவு முறையில் அமைக்கப்படும் சங்கத்திற்கே கூட்டுறவுச் சங்கம் என்பது பெயர்.

**2. கூட்டுறவுச் சங்கம் எத்தனை வகைப்படும் ?**

கூட்டுறவு வேளாண்மைச் சங்கம், கூட்டுறவுப் பண்டசாலை, கூட்டுறவு வீடு கட்டும் சங்கம், கூட்டுறவு நிலவள வங்கி, கூட்டுறவுத் தொழிற்சங்கம், கூட்டுறவு நெசவாளர் சங்கம் எனக் கூட்டுறவுச் சங்கம் பலவகைப்படும்.

**3. கூட்டுறவு வேளாண்மைச் சங்கத்தின் முக்கிய நோக்கம் யாது ?**

உழவுத் தொழில் செய்பவருக்கு வேண்டும் கடன்களைக் கொடுப்பதும், உழவுத் தொழிலுக்கு வேண்டும் உதவிகளைச் செய்வதும், கூட்டுறவு வேளாண்மைச் சங்கத்தின் முக்கிய நோக்கம் ஆகும்.

**4. கூட்டுறவுப் பண்டசாலை எப்படி மக்களுக்குப் பயன்படுகிறது ?**

கூட்டுறவுப் பண்டசாலையில் நமக்கு வேண்டும் பொருள்கள் எல்லாம் விற்கப்படும். நாட்டின் பல இடங்களிலிருந்தும் பொருள்களை வாங்கிவந்து வைத்து,

அவற்றைக் குறைந்த இலாபத்தோடு இச் சங்கத்தினர் மக்களுக்கு விற்பனை செய்வர்.

**5. கூட்டுறவு வீடு கட்டும் சங்கம் என்ன செய்கிறது?**

இது கூட்டுறவு முறையில் நிலத்தை வாங்கும்; பலருக்கும் மனைகளாகப் பிரித்துக் கொடுக்கும்; வீடுகள் கட்டக் கடன் உதவி செய்யும். இது சில இடங்களில் வீடு கட்டியும் தரும்.

**6. கூட்டுறவுத் தொழிற்சங்கத்தின் பணிகள் எவை?**

கூட்டுறவுத் தொழிற்சங்கத்தார் கூட்டுறவு முறையில் நிதி திரட்டித் தொழில் நடத்துவர். தொழில்மூலம் கிடைக்கும் இலாபத்தில் ஒரு பகுதி, உறுப்பினர் அனைவருக்கும் பங்கிட்டுக் கொடுக்கப்படும்.

**7. கூட்டுறவு நெசவாளர் சங்கம் எதற்காக அமைக்கப்படுகிறது?**

நெசவாளர் தனித்தனியே தங்களுக்கு வேண்டிய தறி, நூல், சாயம் முதலியவைகளை வாங்க உதவி செய்வதற்கு அமைக்கப்பட்டதே கூட்டுறவு நெசவாளர் சங்கம். நெசவாளர் நெய்த கைத்தறித் துணிகளை வாங்கி, மக்களுக்கு விற்கும் பணியை இச்சங்கம் செய்து வருகிறது.

**8. கூட்டுறவின் அடிப்படைக் கொள்கை யாது?**

'ஒருவர் பலருக்கும், பலர் ஒருவருக்கும் உதவி செய்வது' என்பதே கூட்டுறவின் அடிப்படைக் கொள்கை. தனிப்பட்ட ஒருவரால் செய்ய இயலாத செயல்களை நாம் கூட்டுறவு மூலம் எளிதாகச் செய்யலாம். கூட்டுறவுத் துறையில் கிட்டும் இலாபம் உறுப்பினர் அனைவருக்கும் பகிர்ந்து கொடுக்கப்படும்.

## 10. பொறுமையே பெருமை தரும்



### அருஞ்சொற்பொருள்

இங்ஙனம் - இப்படி

முனைந்தது - ஊக்கம் கொண்டது

ஆட்டிப்படைத்தது - தான் எண்ணியபடி ஆடச் செய்தது

வானளாவ - மிக உயர்வாக
இணங்கி - பொருந்தி
தட்டாமல் - தடையில்லாமல்
வியப்பு - ஆச்சரியம்
புரியாமல் - விளங்காமல்
திகைத்தனர் - குழப்பம் அடைந்தனர்
சினம் - கோபம்
ஆட்டுப்பட்டி - ஆடுகளை அடைத்து வைக்கும் இடம்
வெறிச்செயல் - அறிவு தடுமாறிய முரட்டுச் செயல்
தவற்றுக்கு - குற்றத்துக்கு
தீய - கொடிய

## I. வினா-விடை

**1. கண்ணப்பரின் பெயரும் புகழும் எங்கும் பரவக் காரணம் என்ன ?**

கண்ணப்பரிடம் செல்வம் நிரம்பியிருந்தது போலவே அன்பும் அருளும் நிரம்பியிருந்தன. அவர் தம் வேலைக்காரர்களைத் தம் பிள்ளைகளைப் போலவே நடத்தினர். அவர்கள் அவரிடம் அளவுகடந்த அன்பும் மரியாதையும் காட்டினர்கள்; அவரைப்பற்றி அடிக்கடி புகழ்ந்து பேசி மகிழ்ந்தார்கள். அதனல் அவர் பெயரும் புகழும் எங்கும் பரவின.

**2. கண்ணப்பரைப் பேய்க்கு ஏன் பிடிக்கவில்லை ?**

கண்ணப்பரை வேலைக்காரர்கள் எல்லாரும் புகழ்ந்து பேசுவது ஒரு பேய்க்குப் பிடிக்கவில்லை. எப்படியாவது பகையை உண்டாக்கி அவர்களைப் பிரித்துவிட வேண்டுமென்று அந்தப் பேய் எண்ணியது.

**3. பேய் தன் வேலையை எப்படித் தொடங்கியது ?**

வேலைக்காரருள் பொன்னன் என்பவன் ஒருவன். அவன் மனம் அடிக்கடி மாறும். பேய் அவன் துணையைக் கொண்டு தன் எண்ணத்தை நிறைவேற்ற முயன்றது. அவன் மனத்துள் புகுந்து அவனை ஆட்டிப்படைத்தது. அதனல் அவன் அடிக்கடி தன் கூட்டாளிகளுடன் சண்டையிட்டான்.

**4. கண்ணப்பரை எல்லாரும் புகழ்வதைப் பொருத பொன்னன், நண்பர்களுக்குக் கூறியவை யாவை ?**

ஒரு நாள் மாலை வேலைக்காரர்கள் கண்ணப்பரின் குணத்தைப் பாராட்டிப் பேசிக்கொண்டு இருந்தபோது அங்கு வந்த பொன்னன், "நீங்கள் நம் தலைவரை ஏன் வானளாவப் புகழ்கிறீர்கள் ? நாம் இரவு பகல் என்று பாராமல் உழைக்கிறோம். அவருக்கு வேண்டுவனவற்றை நாம் தட்டாமல் செய்வதால்தான் அவர் மகிழ்ச்சி அடைகிருர்; நம்மிடம் அன்பாய் இருப்பவரைப்போல

நடிக்கிறார். அவர் விரும்பாத செயல்களை நீங்கள் செய்து பாருங்கள். அவர் எவ்வளவு கோபம் கொள்ளு வார் என்பதை அப்போது நீங்கள் தெரிந்து கொள் வீர்கள்" என்று கூறினான்.

**5. பொன்னன் கூறியதைக் கேட்ட நண்பர்களுள் ஒருவன் என்ன செய்தான்?**

திடீரென்று பொன்னன் ஏன் இப்படிப் பேசுகிறான் என்பது புரியாமல் திகைப்படைந்த நண்பர்களுள் ஒருவன், "தலைவர் ஒருபோதும் சினம் கொள்ள மாட்டார்; தீங்கும் செய்யமாட்டார். இனி நீ அப்படிப் பேசாதே!" என்று கூறினான்.

**6. பொன்னனது வெறிச் செயல் யாது?**

ஒரு நாள் கண்ணப்பர் தம் அன்புக்குரிய செம்மறி ஆட்டைத் தம் நண்பர்களுக்குக் காட்டும்படி பொன்ன னிடம் கூறினார். அவன் மந்தைக்குள் நுழைந்து அந்தச் செம்மறி ஆட்டைப் பிடித்து இழுத்து வந்தான். தலைவ ருக்கும் அவர் நண்பர்களுக்கும் எதிரில் அதன் கால்களை உடைத்தான். அந்த ஆடு துடிதுடித்து இறந்தது.

**7. பொன்னன் வெறிச் செயலால் மகிழ்ந்தது யார்?**

பொன்னனின் இந்த வெறிச் செயலைக் கண்டு அங்கே மரத்தின்மேல் மறைந்திருந்த பேய் மகிழ்ந்தது.

**8. பொன்னன் வெறிச்செயல் கண்டு கண்ணப்பர் என்ன செய்தார்?**

கண்ணப்பர் தம் கண்முன் அன்புக்குரிய ஆடு கொல்லப்பட்டது கண்டு திடுக்கிட்டார். பிறகு அவர் பொன்னனைப் பார்த்துப் புன்சிரிப்புச் சிரித்து, "ஏதோ பேய் உன்னை ஆட்டுவதால்தான் நீ இவ்வாறு செய்கிறாய் என்று நினைக்கிறேன். நீ செய்த இந்தக் கொடுமை யான செயலுக்கு நான் உன்மீது கோபங்கொள்ளவில்லை. உன் குற்றத்திற்கு உனக்குத் தண்டனை கொடுக்கவும் விரும்பவில்லை. உனக்கு நல்ல குணம் உண்டாக வேண்டும் என்றே விரும்புகிறேன். இனி உன் விருப்பப் படி நீ எங்கு வேண்டுமானாலும் போகலாம். உனக்கு வேண்டும் பணமும் உடைகளும் தருகிறேன்" என்று அன்புடன் கூறினார்.

**9. பொன்னன் என்ன ஆனான்?**

கண்ணப்பர் கூறியது கேட்ட பேய் அவர் அன்பைக் கண்டு மனம் உருகிக் கீழே விழுந்து இறந்தது.

பொன்னன் தன் குற்றத்துக்கு வருந்திக் கண்ணப்பர் கால்களில் விழுந்து வணங்கித் தன்னை மன்னிக்கும்படி வேண்டினான்; கண்ணப்பரின் சிறந்த குணங்களைப் பாராட்டினான்.

II. புள்ளியிட்ட இடங்களை ஏற்ற சொற்களால் நிரப்பு :

1. கண்ணப்பரை எல்லாரும் **புகழ்ந்தனர்.**
2. ஆடு துடிதுடித்து இறந்தது.

பயிற்சி

I. வருவாய், படித்தேன், பாடுகிறான்—இச்சொற்களைக் கீழ்வரும் வாக்கியங்களில் பொருத்தமான இடத்தில் அமைத்து எழுது :

1. நாளை நீ வீட்டுக்கு வருவாய்.
2. நேற்று நான் பாடம் படித்தேன்.
3. இன்று கண்ணன் பாட்டுப் பாடுகிறான்.

II. கீழே உள்ள வாக்கியங்களில் இடம் மாறி உள்ள சொற்களைச் சரியாக அமைத்து எழுது :

1. நாங்கள் நேற்றுப் பள்ளிக்குப் போனோம்.
2. நீ எங்கு வேண்டுமானாலும் போகலாம்.
3. பேய் கீழே விழுந்து இறந்தது.



## 11. செஞ்சிக் கோட்டை

அருஞ்சொற்பொருள்

மதிற்சுவர் - கோட்டையைச் சுற்றிலும் வேலிபோல் எழுப்பப்படும் சுவர்
அகழி - கோட்டையைச் சுற்றி உள்ள ஆழமான நீர்நிலை
வாயில் - நுழையும் வழி
குன்று, கிரி - சிறிய மலை
துர்க்கம் - ஏறமுடியாத மலை
தானியக் களஞ்சியம் - உணவுத் தானியங்களைச் சேமித்து வைக்கும் இடம்
சிலம்பப் பயிற்சிக்கூடம் - போர்க்கலை கற்பிக்கும் இடம்
நீராடும் - குளிக்கும்
அகன்று - விரிந்து
அடிவாரம் - மலையின் அடிப் பகுதி
ஒட்டி - சார்ந்து
சுனை - மலையில் இயற்கையாய் அமைந்த நீர் நிலை
கொலு மண்டபம் - அரச சபை

## I. வினு-விடை

**1. செஞ்சிக்கோட்டை எங்கு உள்ளது?**

தென்னுர்க்காடு மாவட்டத்தில் உள்ள செஞ்சி என்னும் ஊரில் உள்ள கோட்டையே செஞ்சிக்கோட்டை. செஞ்சியாறு என்னும் வராக நதியின் மேற்குக் கரையில் 3 மலைகள்மீது இக்கோட்டை இருக்கிறது.

**2. மூன்று மலைகளின் பெயர்கள் யாவை?**

கிருஷ்ணகிரி, சந்திராயன் துர்க்கம், இராசகிரி என்பவை அந்த மூன்று மலைகளின் பெயர்கள் ஆகும். இவற்றுள் இராசகிரியே உயரமானது. இதன் உயரம் 240 மீட்டர்.

**3. உட்கோட்டை எவ்வாறு அமைந்துள்ளது?**

இராசகிரியின் அடியில் உள்ள கோட்டை உட்கோட்டை எனப்படும். இதனைச் சுற்றிலும் மதிற் சுவரும் அகழியும் இருக்கின்றன. இதன் தென் பகுதியில் சக்கரக் குளமும், செட்டி குளமும் இருக்கின்றன. கோட்டையின் உள்ளே பெரிய தானியக் களஞ்சியமும் சிலம்பப் பயிற்சிக்கூடமும் நீராடும் இடங்களும் போர்வீரர்கள் இருந்த இடங்களும் காணப்படுகின்றன. அவற்றை அடுத்துக் கலியாண மகால் என்னும் கட்டடம் இருக்கிறது. இது பல அடுக்குகளைக் கொண்டது. 24 மீட்டர் உயரமுடையது. இதைச் சுற்றிலும் பல அறைகள் இருக்கின்றன.

**4. இராசகிரியின் உச்சியில் இருப்பவை யாவை?**

இராசகிரியின் உச்சியில் ஒரு கோட்டை இருக்கிறது. இக்குன்றின் உச்சிக்குச் செல்ல அடிவாரத்தில் கிழக்குப் புறமுள்ள உட்கோட்டை வாயில் வழியாகவே ஏற வேண்டும். உச்சியில் அரங்கநாதர் கோவிலும், 2 தானியக் களஞ்சியங்களும், மருந்துக் கிடங்கும், மணிக் கூண்டும், பீரங்கி அமைந்த ஒரு மண்டபமும், வற்றுத நீர் நிறைந்த சுனையும் இருக்கின்றன.

**5. கிருஷ்ணகிரியின் உச்சியில் இருப்பவை யாவை?**

கிருஷ்ணகிரி இராசகிரியைவிட உயரம் குறைவானது. இதை இராணிமலை என்றும் கூறுவர். இம் மலைமீது ஏறப் படிகள் இருக்கின்றன. இதன் உச்சியில் ஒரு கோட்டை, 2 தானியக் களஞ்சியங்கள், ஒரு கொலு

மண்டபம், ஓர் இடிந்த மண்டபம், ஒரு நீர்ச்சுனை முதலியவை இருக்கின்றன.

6. சந்திராயன் துர்க்கத்தின் உச்சியில் இருப்பவை யாவை?

சந்திராயன் துர்க்கத்தின் உச்சியில் ஒரு கோட்டை இருக்கிறது. அடிப்பாகத்தை ஒட்டி வேங்கடரமண சுவாமி கோவில் இருக்கிறது. இதில் சிலை இல்லை. கீழ்க்கோட்டையின் பெரும்பகுதி அழிக்கப்பட்டுள்ளது. அதற்கு அருகில் சாதத்துல்லாகான் மசூதி இருக்கிறது.

7. செஞ்சிக் கோட்டையைக் கட்டியது யார்?

ஏறக்குறைய எண்ணூறு ஆண்டுகளுக்கு முன், ஆனந்தக்கோன் என்பவனால் செஞ்சிக் கோட்டை கட்டப்பட்டது. தேசிங்கு மன்னன் இக்கோட்டையிலேதான் ஆட்சி புரிந்தான்.

II. புள்ளி இட்ட இடங்களில் பொருத்தமான சொற்களை எழுது:

1. தென்னார்க்காட்டு மாவட்டத்தில் இருக்கும் செஞ்சி என்னும் ஊரில் உள்ள கோட்டையே செஞ்சிக் கோட்டை என்பது.

2. அக் கோட்டையிலேதான் தேசிங்கு மன்னன் ஆட்சிபுரிந்தான்.

## இலக்கணம்

இப் பாடத்தில் வந்துள்ள உயர்திணை, அஃறிணைப் பெயர்களைக் கட்டம் இட்டு எழுது:

| உயர்திணைப் பெயர்கள் | அஃறிணைப் பெயர்கள் |
|---|---|
| வீரர்கள், வேங்கடரமணசுவாமி, சாதத்துல்லாகான், ஆனந்தக் கோன், தேசிங்கு மன்னன், இராணி, அரங்கநாதர். | தென்னார்க்காடு, மாவட்டம், செஞ்சி, ஊர், கோட்டை, ஆறு, வராகநதி, மேற்குக்கரை, தொலைவு, மூன்று மலை, கருங்கல், மதிற்சுவர், மேற்பரப்பு, மீட்டர், அகலம், உயரம், அகழி, வடக்குப்புறம், குன்று, கிருட்டிணகிரி, இராசகிரி, சந்திராயன் துர்க்கம், மதில், மரம். |

# 12.  யார் குடை?

(பாட்டு)

## அருஞ்சொற்பொருள்

சிற்றுண்டி விடுதி - தின்பண்டங்கள் விற்கும் இடம்
சிறுதூறல் - சிறிய மழை
தாமதிக்கும் - தங்கும்
சரக்குகள் - தின்பண்டங்கள்
பற்று - பெற்ற பொருளுக்குரிய தொகை (கடனாக எழுதுதல்)
உணர்வு - அறிவு
பரவாயில்லை - குற்றமில்லை
தீதா - கெட்டதா
இழிசெயல் - தகாத செய்கை
அகன்றதென - நீங்கியதென்று
வழித் துணைவன் - வழிக்குத் துணையாய் வந்தவன்

## வினா-விடை

**1. சிற்றுண்டி விடுதிக்குள் இருவர் ஏன் தாமதித்தனர் ?**

சிறிய தூறலாகப் பெய்த மழை, பெரிய மழையாய் மாறிப் பெய்யவே, சிற்றுண்டி விடுதிக்குள் இருவர் சிறிது நேரம் தாமதித்தனர். அந்தச் சாக்கில் ஒருவர், மூன்று சரக்குகளை வயிற்றுக்குள் இறக்கிவிட்டுப் பற்றெழுதும் புத்தகத்தில் அதன் தொகையைப் பதியவைத்தார்.

**2. ஆறடிக்குக் குறையாத உருவம் என்ன செய்தது?**

மூன்று சரக்குகளை வயிற்றுக்குள் இறக்கியவர், எதிரிலிருந்த குடையை விரித்துக்கொண்டு புறப்பட்டார். அப்போது அன்னியன் போல் அவர் எதிரில் உட்கார்ந்திருந்த 6 அடிக்குக் குறைவில்லாத ஆள், "மன்னியுங்கள் நானும் வருகின்றேன்" என்று சொன்னார். பிறகு அவரும் குடைக்குள் நுழைந்து கொண்டு உடன் வந்தார்.

**3. வழியில் இருவரும் என்ன பேசிக்கொண்டனர் ?**

6 அடி மனிதர் குடைக் கீழ் நுழைந்து வருவதைத் தடுப்பதற்குள், 'அடடா! என்ன மழை, நீங்கள் எதுவரை போகிறீர்கள்?' என அவர் கேட்டார். முதல் ஆள், 'அறவழியார்ப்பேட்டை வரை' என்றார். ஆறடி மனிதர், 'நானும் அங்கேதான்' என்றார். உடனே முதல் ஆள், 'என்ன போங்கள். மறதியினால் மழைநாளில் மற்றவர்களை வருத்துகிறோம் என்னும் உணர்வு இல்லாத பிறவிகளும் மனிதர் போலப் பேசலாமோ? பெரியவரே சொல்லுங்கள்!' என்று கூறினார்.

**4. 'பரவாயில்லை' என்றவர் யார்? ஏன்?**

அந்த ஆறடி மனிதர், "ஆகா! திறமையுடன் பேசுகின்றீரே! பரவாயில்லை. சிறு உதவி செய்வதும் கெட்டதா?" என்றார்.

**5. முதல் மனிதர் என்ன நினைத்தார்?**

"இந்த ஆறடி மனிதரின் இழிசெயலை இடித்துக் காட்ட இன்னும் நான் என்ன செய்வது! அப்பப்பா வீடு வந்து விட்டது. தொல்லை நீங்கியது" என்று நினைத்து முதல் ஆள் உள்ளே சென்றார்.

**6. வழித்துணையாய் வந்தவர் கேட்டது என்ன?**

வீட்டுக்குள் சென்ற முதல் ஆளைப் பார்த்து, வழித்துணையாய் வந்த ஆறடி மனிதர், "என் குடையைத் தாருங்கள்!" என்று கூறிப் பின்னால் வந்தார். முதல் ஆள் அப்பொழுதுதான் தம் குடை வீட்டில் இருப்பதைக் கண்டார். "ஐயையோ குற்றவாளி நானே தானா?" என்று கருதினார்.

**7. இவர்களுள் குற்றவாளி யார்?**

இவர்களுள், சிற்றுண்டி விடுதியில் தின்றுவிட்டு எதிரில் இருந்த குடையைத் தூக்கிக் கொண்டு வந்து விட்ட முதல் ஆளே குற்றவாளி. அதனை, அவர் தம் வீட்டுக்கு வந்து தம் குடையைப் பார்த்த பிறகே உணர்ந்துகொண்டார்.

## 13. யூக்கலிப்டசு மரம்

### அருஞ்சொற்பொருள்

| | |
|---|---|
| குழு - கூட்டம் | இறுக - அழுத்தமாக |
| இனம் - வகை | தூய்மை - சுத்தம் |
| மணம் - வாசனை | ஊதியம் - இலாபம் |
| அஞ்சி - பயந்து | தைலம் - எண்ணெய் |

### I. வினா-விடை

**1. நீலகிரித் தைலம் என்பது யாது?**

யூக்கலிப்டசு மரத்தின் இலைகளிலிருந்து இறக்கப்படுவது நீலகிரித் தைலம் எனப்படுகிறது. இது நீலகிரி

யில் இறக்கப்படுவதால் நாம் இதனை இப் பெயரால் வழங்குகிறோம்.

**2. யூக்கலிப்டசு மரம் எப்படிப்பட்ட மர வகையைச் சேர்ந்தது?**

யூக்கலிப்டசு மரம் ஆஸ்திரேலியாவிலிருந்து நீலகிரிக்குக் கொண்டு வரப்பட்டது. இதில் 300 இனங்கள் இருக்கின்றன. இவற்றுள் பல இனங்கள் விறகுக்கு மட்டுமே பயன்படும். சிலவகை மரங்களே தைலத்திற்கு உதவும். இம் மரம் இலை உதிராத மர வகையைச் சேர்ந்தது.

**3. யூக்கலிப்டசு மரத்திலிருந்து எப்படி இலைகளைப் பறிக்கிறார்கள்?**

மரம் ஏறுவதில் பழக்கம் மிகுந்தவர்களே இம் மரங்களில் ஏறி இலைகளைப் பறித்துப் போடுகிறார்கள். அவர்கள் ஒரு மரத்திலிருந்து மற்றொரு மரத்துக்குக் குரங்குகளைப் போல் தாவிவிடுவார்கள். அவர்கள் மர நுனியில் $1\frac{1}{2}$ மீட்டர் வரை உள்ள கிளைகளை விட்டுவிட்டு மற்றப் பகுதிகளில் இருக்கும் கிளைகளை வெட்டித் தள்ளுவார்கள். அந்த இலைகள் 2 நாள் வரையில் வெயிலில் உலர்த்தப்படும்.

**4. நீலகிரித் தைலம் எதிலிருந்து எம்முறையில் இறக்கப்படுகிறது?**

முதிர்ந்த மரங்களின் இலைகளே தைலம் இறக்கச் சிறந்தவை. கொப்பரையில் $\frac{1}{4}$ பங்கு நீரை ஊற்றி, அதில் 227 கிலோகிராம் இலைகளை இடுவார்கள். காற்றுப் புகாதவாறு கொப்பரையை இறுக மூடி விடுவார்கள். பின்பு, அதைத் தீ எரித்துக் கொதிக்க வைப்பார்கள். கொப்பரையிலிருந்து தைலம் ஆவியாய் எழும்பி மூடியில் பொருத்தியுள்ள பித்தளைக் குழாய் வழியாக மற்றொரு பாத்திரத்திற்கு வரும். அப் பாத்திரத்தைக் குளிர்விக்கும் போது ஆவி தைலமாகிப் புட்டிகளில் நிரம்பும்.

**5. ஒரு முறையில் எவ்வளவு தைலம் கிடைக்கும்?**

ஒரு கொப்பரையில் தைலம் காய்ச்சினால் 3 புட்டித் தைலம் கிடைக்கும். அதாவது 3 புட்டிகளிலும் 90 அல்லது 95 அவுன்சு தைலம் இருக்கும். இந்த அளவு தைலம் இறக்க 6 அல்லது 7 மணி நேரம் ஆகும். இதனைத் தூய்மைப்படுத்தினால் பொன்னிறமாயிருக்கும்.

6. நீலகிரித் தைலம் இறக்குவது எவ்வகைக் கைத் தொழில்?

நீலகிரியில் இத் தைலம் இறக்குவது குடிசைத் தொழிலாகவே நடைபெறுகிறது. இது ஊதியம் தரக்கூடிய கைத்தொழிலாகும்.

II. சேர்த்தெழுது:

| | | | | |
|---|---|---|---|---|
| நீலகிரி | + | தைலம் | = | நீலகிரித்தைலம் |
| காற்று | + | பை | = | காற்றுப்பை |
| பித்தளை | + | குழாய் | = | பித்தளைக்குழாய் |
| புட்டி | + | தைலம் | = | புட்டித்தைலம் |

III. பிரித்தெழுது:

| | | |
|---|---|---|
| நூற்றிருபத்து நான்கு | = | நூற்று இருபத்து நான்கு |
| காற்பங்கு | = | கால் பங்கு |
| தொண்ணூற்றைந்து | = | தொண்ணூற்று ஐந்து |

IV. தனித்தனி வாக்கியத்தில் அமைத்து எழுது:

நுனிக்கிளையில் இலைகள் கொத்துக்கொத்தாய் இருக்கும்.

நான்காம் வகுப்பு நூல்கள் கட்டுக்கட்டாய் வந்து இறங்கின.

பிள்ளைகள் கூட்டங்கூட்டமாய் நின்று பார்த்தார்கள்.

V. பின்வரும் வாக்கியங்களில் உள்ள ஆண்பால், பெண்பால் பெயர்களைக் கட்டத்தில் எழுது.

1. மாதவி தேர்வில் மிகுந்த மதிப்பெண் பெறுகிறாள்.
2. தம்பி தன் தமக்கையிடம் பாடம் படிக்கிறான்.

| ஆண்பால் | பெண்பால் |
|---|---|
| தம்பி | மாதவி |
| | தமக்கை |

# 14.  பொங்கல் விழா

### அருஞ்சொற்பொருள்

விழைந்து - விரும்பி
அறுவடை - பயிர்களை அறுத்து எடுத்தல்
கதிரவன் - சூரியன்
இறுதி - கடைசி
போகி - இந்திரன்
பண்டிகை - விழா
தட்டுமுட்டுச் சாமான்கள் - வீட்டில் பயன்படுத்தும் பொருள்கள்
சிறுபறை - கைம்மேளம்
உலா - பவனி
வண்ணம் - நிறம்
தொன்றுதொட்டு - பழைய காலம் முதல்
திறந்தவெளி - மைதானம்
குழுமி - கூடி
உண்டு - சாப்பிட்டு
திரளாக - கூட்டமாக
விழிப்புடன் - எச்சரிக்கையுடன்
நன்னாள் - நல்ல நாள்

### I. வினா-விடை

**1. பொங்கலைத் தமிழ்த் திருநாள் என்று ஏன் கூறுகிறோம்?**

பொங்கல் தமிழ் நாட்டின் அறுவடை விழா. இன்று இது எல்லாரும் கொண்டாடும் தமிழ்த் திருநாளாய் நடந்து வருகிறது. இது 4 நாள் கொண்டாடப்படுகிறது.

**2. போகிப் பண்டிகை சென்னையிலும் அதைச் சார்ந்த ஊர்களிலும் எப்படிக் கொண்டாடப்படுகிறது?**

மார்கழி மாத இறுதி நாளில் போகிப் பண்டிகை கொண்டாடப்படுகிறது. அன்று காலையில் பயன்படாத தட்டுமுட்டுச் சாமான்களை வீட்டின் முன் குவித்துக் கொளுத்துவது சென்னையிலும், சென்னையைச் சார்ந்த ஊர்களிலும் உள்ள வழக்கம். நெருப்பைச் சுற்றிச் சிறுவர் சிறுபறை கொட்டி மகிழ்வர். இதுதான் பொங்கல் விழாத் தொடக்கம். இவ்விழாவின் முதல் நாள் இது.

**3. பொங்கலிட்டுப் படைப்பது எப்படி?**

தைத் திங்கள் முதல்நாள் பொங்கல் விழா. அன்று பெரும்பாலார் சூரியனுக்குப் பொங்கல் இட்டுப் பூசனி இலையில் அப் பொங்கலையும் மஞ்சள் கொத்தையும்

கரும்பையும் வைத்துப் படைப்பதுண்டு. இது பெரும் பொங்கல் எனவும் வழங்கப்படும். இது இவ்விழாவின் இரண்டாம் நாள்.

**4. மாட்டுப் பொங்கலைப் பற்றி எழுது.**

பொங்கலுக்கு அடுத்த நாள் மாட்டுப் பொங்கல். அதனால் மாட்டுப் பொங்கல் அன்று மாடுகளைக் குளிப் பாட்டுவார்கள். அவற்றின் கொம்புகளுக்கு வண்ணம் தீட்டுவார்கள். கழுத்தில் பனங்குருத்தால் செய்த சல்லியைக் கட்டுவார்கள். அவற்றைப் பிடித்துக்கொண்டு மாலையில் தெருக்களில் உலா வருவார்கள். இது பொங்கல் விழாவில் மூன்றும் நாள்.

**5. மஞ்சு விரட்டு என்பது என்ன ?**

சில ஊர்களில் மாட்டுப் பொங்கல் அன்றோ மறு நாளோ காளைகளை அலங்கரித்துத் திறந்த வெளியில் ஓட்டுவர். ஓடும் காளைகளை ஆர்வம் மிக்க இளைஞர்கள் விரட்டிப் பிடிப்பார்கள். காளையைப் பிடிப்பவர்களுக்குப் பரிசு தருவர். இதற்கு மஞ்சு விரட்டு என்பது பெயர்.

**6. பொங்கல் எல்லாருக்கும் மகிழ்ச்சி பொங்கும் நன்னாள் என்பது எப்படி ?**

பொங்கல் விழாவின்போது துணிக் கடைகளில் வாணிகம் மிகுதியாய் நடக்கும். கடைகளில் மற்றப் பொருள்களும் மிகுதியாய் விற்பனையாகும். இதனால் பொங்கல் நாள் தமிழ் நாட்டில் எல்லாருக்கும் மகிழ்ச்சி பொங்கும் நன்னாளாய் இருந்து வருகிறது.

**II. வாக்கியங்களில் அமைத்து எழுது :**

சிறுபறை கொட்டி, உலா வருவர், தொன்றுதொட்டு.

என் தம்பி போகி அன்று காலையில் சிறுபறை கொட்டி மகிழ்வான்.

தேர்தலில் வெற்றி பெறும் தலைவர் ஊரில் உலா வருவார்.

மரக்கறி தவிர மற்றவைகளை உண்ணாதிருப்பது எங்கள் குடும்பத்தில் தொன்றுதொட்டு வரும் வழக்கம்.

**III. சேர்த்து எழுது :**

இ + பொங்கல் = இப்பொங்கல்
அ + பையன் = அப்பையன்
எ + குழந்தை = எக்குழந்தை

**IV. பிரித்தெழுது :**

நன்னாள் = நன்மை நாள்
பெரும்பொங்கல் = பெருமை பொங்கல்
தென்னாடு = தெற்கு நாடு

### இலக்கணம்

**1.** கீழ்வரும் சொற்களைப் பலர்பாலாக மாற்றி எழுது :
தலைவன், நண்பன், தோழி, அன்பன், தங்கை.

| | |
|---|---|
| தலைவன் — தலைவர் | அன்பன் — அன்பர் |
| நண்பன் — நண்பர் | தங்கை — தங்கையர் |
| தோழி — தோழியர் | |

**2.** கீழ்வரும் சொற்களுள் ஆண்பாலுக்குப் பெண் பாலும், பெண்பாலுக்கு ஆண்பாலும் எழுது :

அரசி, சிறுவன், தம்பி, தங்கை, மாமன்.
அரசி—அரசன் ; தங்கை—தம்பி ; சிறுவன்—சிறுமி ; மாமன்—மாமி ; தம்பி—தங்கை.

**3.** கண்ணகியார்
தகப்பனார்
ஆசிரியர்
காரைக்கால் அம்மையார்
} இவை மரியாதைப் பன்மைகள்

## 15.  பாக்கு மரம் 

### அருஞ்சொற்பொருள்

தோப்பு - பல மரங்கள் சேர்ந்து வளரும் இடம்
மடல் - மட்டை
கானம் - பாட்டு
மரகதம் - பச்சைக் கல்
திரள் - கூட்டம்
சாரல் - மலைப் பக்கம்
வளமார் - வளம் பொருந்திய
கேடில் - கேடு + இல் = குற்றம் இல்லாத
மெத்த - மிகுதியாக
அடைக்காய் - பாக்கு
அடைகாய் - வெற்றிலையும் பாக்கும்
அடை - வெற்றிலை
காய் - பாக்கு

### வினா—விடை

**1. பாக்கு மரம் எப்படி வளரும் ?**

பாக்கு மரம் காற்றில் ஆடி அசைந்து உடல் வளைந்து வானத்தில் தலை நிமிர்ந்து நிற்கும்; பல மரங்கள்

சேர்ந்து தோப்பாய் நிற்கும்; குளிர்ந்த நிழல் தரும். வானத்தைத் தொடுவது போல மட்டை விரிந்து, காற்றடிக்கும் போது, குயில் ஓசை போல ஓசை உண்டாகும். இது மலைச்சரிவிலும் மணல் பொருந்திய வளமான நிலங்களிலும் நன்கு வளரும்.

**2. பாக்குக் குலைகள் எப்படி இருக்கும்?**

உருண்டையான பச்சை மரகதக் கற்கள் கொத்தாக ஒன்று சேர்ந்திருப்பதைப் போல் பச்சை நிறக் காய்கள் திரளாகக் குலைகுலையாகக் காய்க்கும்.

**3. வெட்டுப் பாக்கு, சாயப்பாக்கு என்பவை யாவை?**

காயிலிருந்து வெட்டி எடுக்கும் துண்டுகள் வெட்டுப் பாக்கு என்று கூறப்படும். அதற்குக் கெட்டிச் சாயம் தீட்டிவிட்டால் அதுவே சாயப் பாக்கு என்று கூறப்படும். பாக்கிற்கு அடைக்காய் என்னும் பெயரும் உண்டு.

**4. எவை மெத்தத் தீங்கு விளைத்திடும்?**

சொத்தைப் பாக்கைத் தின்பது, சும்மாப் பாக்கை மெல்வது முதலியவை மெத்தத் தீங்கை விளைத்திடும்.

## 16.  திரு.வி.கலியாணசுந்தரனர்

### அருஞ்சொற்பொருள்

சிற்றூர் - கிராமம்
வாணிகம் - வியாபாரம்
வருவாய் - வருமானம்
வறுமை - தரித்திரம்
கருத்தூன்றி - கவனம் செலுத்தி
இன்முகத்தோடு - மலர்ந்த முகத்தோடு
பணியாற்றினர் - வேலை செய்தார்
அச்சகம் - நூல்களை அச்சிடும் இடம்
பண்புள்ள - குணமுள்ள
இல்லறம் - குடும்ப வாழ்க்கை
வேட்கை - விருப்பம்
நாளிதழ் - தினசரிப் பத்திரிகை
அயராமல் - தளராமல்
ஒப்பற்ற - சமானம் இல்லாத
இணையற்ற - சமம் இல்லாத
இயற்கை எய்தினர் - இறந்தார்
நாவலர் - பேசுதலில் வல்லவர்
பாவலர் - கவி பாடுவதில் வல்லவர்

## I. வினா-விடை

**1. திரு. வி. கலியாணசுந்தரனாரின் இளமைப்பருவம் பற்றி நீ அறிந்ததை எழுது.**

திரு. வி. கலியாணசுந்தரனார், துள்ளம் என்னும் சிற்றூரில் விருத்தாசல முதலியார்—சின்னம்மாளின் மகனாகப் பிறந்தார். துள்ளத்தில் அரிசி வாணிகம் நடத்திய இவர் தந்தை இவருக்குத் தொடக்கக் கல்வியையும், சிறிது ஆங்கிலத்தையும் கற்பித்தார். இளமையில் இவர் சடுகுடு, மற்போர், கால்பந்து போன்ற விளையாட்டுகளை விரும்பி விளையாடினார். மற்றச் சிறுவர்கள் வண்டு, தும்பி முதலியவற்றைக் கயிற்றில் கட்டி விளையாடுவதை இவர் வெறுத்தார். அப்படி விளையாடும் சிறுவர்களை இவர் கண்டிப்பார்.

**2. இளமையில் இவர் எங்குப் படித்தார்?**

துள்ளத்தில் இவர் தந்தைக்குப் போதிய வருவாய் இல்லை. எனவே, அவர் சென்னை இராயப்பேட்டையில் குடியேறினார். அங்கிருந்த தொடக்கப்பள்ளியில் திரு. வி. க. இரண்டாம் வகுப்பில் சேர்க்கப்பட்டார். அப்பள்ளிக்கூடம் மூடப்படவே இவர் வெஸ்லி கல்லூரிப் பள்ளியில் சேர்ந்து படித்தார். இடையே உடல்நலம் இல்லாமையாலும், குடும்ப வறுமையாலும் இவர் தொடர்ந்து 4 ஆண்டுகள் படிக்க முடியாமல் போய் விட்டது. பிறகு, இவர் மறுபடியும் பள்ளியில் சேர்ந்து பள்ளியிறுதி வகுப்பு வரை படித்தார்.

**3. திரு. வி. க. தமிழ் பயின்ற விதத்தை எழுது.**

திரு. வி. க. பள்ளிப்படிப்பை முடித்துக் கொண்ட பிறகு, சிறந்த புலவர்களிடம் முறையாகப் பாடம் கேட்டுத் தமது தமிழ்ப்புலமையை வளர்த்துக் கொண்டார்; கடைக்கணக்கு எழுதும் முறையையும் கற்றார். மத நூல்களை ஆராய்ந்து இறைவன் ஒருவனே என்பதையும், எல்லா மதங்களின் முடிந்த நோக்கமும் ஒன்றே என்பதையும் இவர் தெரிந்து கொண்டார்.

**4. குடும்ப வறுமை நீங்க இவர் செய்த வேலைகள் யாவை?**

இவர் தம் குடும்ப வறுமை நீங்கப் பல அலுவலகங்களில் வேலை செய்தார்; ஸ்பென்சர் கம்பெனியில் கணக்கராயிருந்தார்; அச்சகம் ஒன்று அமைத்தார். அதிலும் போதிய வருவாய் இல்லாமையால், வெஸ்லி கல்லூரியில் தமிழாசிரியர் வேலையில் அமர்ந்தார்.

**5. திரு. வி. க. அவர்களின் பத்திரிகைத் தொண்டினைப்பற்றி எழுது.**

திரு. வி. க. நாட்டு விடுதலை வேட்கை கொண்டு, தமிழாசிரியர் வேலையை விட்டு, 'தேசபக்தன்' என்ற நாளிதழ் ஆசிரியரானார். அதன் மூலம் இவர், நாட்டு மக்களுக்கு நாட்டுப்பற்றை ஊட்டினார்; இரண்டரை ஆண்டுகள் இந்த இதழாசிரியராய் இருந்து பிறகு, இதனை விட்டுத் தொழிலாளர் இயக்கம் தொடங்கினார்; 'நவசக்தி' என்னும் வார இதழை 20 ஆண்டுகள் வரை வெளியிட்டு வந்தார்.

**6. நாட்டு விடுதலைக்கும் தொழிலாளர்க்கும் திரு. வி. க. செய்த தொண்டுகள் யாவை?**

நாளிதழ், வார இதழ்கள் மூலம் இவர் மக்களிடையே நாட்டுப்பற்றை வளர்த்ததோடு நிற்கவில்லை. நாட்டு மக்களுக்குத் தொண்டு செய்வதையே குறிக்கோளாகக் கொண்டு சுதந்தர இயக்கத்தில் சேர்ந்து நாட்டு விடுதலைக்காகப் பாடுபட்டார். தொழிலாளர் இயக்கத்தில் மும்முரமாய் ஈடுபட்டு, தொழிலாளர்கள் மேன்மைக்காக இவர் இடைவிடாமல் பாடுபட்டு உழைத்தார்.

**7. திரு. வி. க. இயற்றிய நூல்களுள் இரண்டின் பெயரை எழுது.**

முருகன் அருள் வேட்டல், பெண்ணின் பெருமை இவ்விரண்டும் இவர் இயற்றிய நூல்களுள் இரண்டு.

**8. திரு. வி. க. இயற்றிய நூல்களுள் சிறந்தவை எவை?**

திரு. வி. க. தமிழில் பல சிறந்த நூல்களை இயற்றினார். அவற்றுள் திரு. வி. க. வாழ்க்கைக் குறிப்புகள், முருகன் அல்லது அழகு, பெண்ணின் பெருமை, தமிழ்த் தென்றல், மனித வாழ்க்கையும் காந்தியடிகளும், முருகன் அருள்வேட்டல், திருமால் அருள்வேட்டல், கிறிஸ்து அருள்வேட்டல், அருகன் அருள் என்பவை சிறந்தவை.

**II. சொற்களைச் சரியாக அமைத்து எழுது.**

திரு. வி. க. நாட்டுக்காகப் பாடுபட்டார்.

திரு. வி. க. துள்ளம் என்னும் ஊரில் பிறந்தார்.

தேசபக்தன் சிறந்த இதழாய்த் திகழ்ந்தது.

### இலக்கணம்

1. கீழ்வருவனவற்றின் பாலை எழுது :
மாடுகள், மலை, மரம், ஆறுகள், களஞ்சியம், அது, அச்சகம்.
மாடுகள், ஆறுகள்—பலவின்பால்.
மலை, மரம், களஞ்சியம், அது, அச்சகம் } ஒன்றன்பால்.

2. கீழ்வருவனவற்றுக்கு ஒன்றன்பால் பெயர் எழுது :
வீடுகள், இவை, ஊர்கள், நூல்கள்.
வீடுகள்—வீடு ; இவை—இது ; ஊர்கள்—ஊர் ; நூல்கள்—நூல்.

3. கீழ்வருவனவற்றுக்குப் பலவின்பால் பெயர்கள் எழுது.
நாள், வீடு, மான், ஆண்டு, பணமுடிப்பு, நாடு.
நாள்—நாள்கள் ; வீடு—வீடுகள் ; மான்—மான்கள் ; ஆண்டு-ஆண்டுகள் ; பணமுடிப்பு-பணமுடிப்புகள் ; நாடு—நாடுகள்.

## 17. இன்பச்செலவு




(நெய்வேலி)

### அருஞ்சொற்பொருள்

இவ்வாண்டு - இந்த வருடம்
திங்கள் - மாதம்
கோடை - வெய்யில் காலம்
இன்பச் செலவு - உல்லாசப் பயணம்
நலம் - நன்மை
பேருந்து - பஸ்
பக்குவம் - பதம்
உரம் - எரு
வாயிலாக - மூலமாக

### I. வினா-விடை

**1. நெய்வேலி எங்கு உள்ளது?**

நெய்வேலி என்னும் ஊர் தமிழ்நாட்டில் தென்னார்க்காடு மாவட்டத்தில் உள்ளது. இவ்வூர் நெடுங்காலம் ஒரு சிற்றூராய் இருந்தது.

**2. நெய்வேலியில் என்ன எடுக்கப்படுகிறது?**

நெய்வேலியில் நிலக்கரி எடுக்கப்படுகிறது. இங்கே நிலக்கரியை எடுக்கப் பெரிய வெட்டவெளிச் சுரங்கங்கள்

வெட்டப்பட்டிருக்கின்றன. நிலத்தைத் தோண்டத் தோண்ட அதிலுள்ள ஊற்றுகளிலிருந்து தண்ணீர் வெளி வருகிறது. அது நீர் இறைக்கும் கருவிகளால் வெளியேற் றப்படுகிறது. பூமிக்குள் இருக்கும் நிலக்கரியை மிகப் பெரிய இயந்திரங்களைக்கொண்டு வெட்டி எடுக்கிறார்கள்.

**3. இது பழுப்பு நிலக்கரி என்று கூறப்படுவது ஏன்?**

நெய்வேலியில் எடுக்கப்படும் நிலக்கரி கறுப்பாய் இல் லாமல் ஒருவகைப் பழுப்புநிறமாய் இருப்பதால் இதற் குப் பழுப்பு நிலக்கரி என்னும் பெயர் வழங்கி வருகிறது.

**4. சுரங்கத்திலிருந்து கிடைக்கும் வேறு பொருள் எது?**

இச் சுரங்கத்தில், பூமியின் மேல் மட்டத்திலிருந்து கீழே அடுக்கடுக்காய்ப் பலவகை மண்கள் அமைந்திருக் கின்றன. இந்தப் பலவகை மண்களுள் வெள்ளை மண் மட்டும் பீங்கான் முதலியவை செய்யப் பயன்படுகிறது.

**5. பழுப்பு நிலக்கரி எவ்வகையில் பயன்படுகிறது?**

நெய்வேலியில் எடுக்கப்படும் பழுப்பு நிலக்கரி, அடுப்பு எரிக்க எரிபொருளாகப் பயன்படுகிறது. இதனைக்கொண்டு அங்கு மின்சாரம் உண்டாக்கப்படு கிறது. யூரியா என்னும் உரமும் செய்யப்படுகிறது.

**6. நெய்வேலி நகரம் இப்போது எவ்வாறு அமைந் துள்ளது?**

சிறிய ஊராய் இருந்த நெய்வேலி, இப்போது அழகிய நகரமாய் விளங்குகிறது. வீதிகள் எல்லாம் அழகாயும் அகலமாயும் வரிசை வரிசையாயும் அமைந்திருக்கின்றன. அங்கே தொடக்கப் பள்ளிகளும், உயர்நிலைப் பள்ளிகளும் இருக்கின்றன. ஊரின் நடுவிடத்தில் பல பெரிய கடைகள் இருக்கின்றன. நகரத்தைச் சுற்றிப் பேருந்து வண்டிகள் ஓடுகின்றன.

**II. சேர்த்து எழுது:**

அந்த + பொருள் = அந்தப்பொருள்.
இந்த + கொடி = இந்தக்கொடி.
எந்த + தட்டு = எந்தத்தட்டு.

**III. வாக்கியங்களில் அமைத்து எழுது:**

ஏறக்குறைய, பலவகை, வரிசைவரிசையாய், பயன்படுகிறது.

**அதன் விலை ஏறக்குறைய ஐம்பது ரூபாய் இருக்கும்.**

அது பலவகையில் நமக்குப் பயன்படுகிறது.

வீரர்கள் வரிசைவரிசையாய் நின்றார்கள்.

வெள்ளைக் களிமண் பீங்கான் செய்யப் பயன்படுகிறது.

### இலக்கணம்

கீழ்வரும் வாக்கியங்களில் உள்ள தன்மைப் பெயர்களை எடுத்து எழுது:

1. நான் புத்தகம் படித்தேன்.
2. யாம் விளையாடினோம்.
3. யாங்கள் நெய்வேலிக்குச் சென்றோம்.

நான், யாம், யாங்கள் என்பவை தன்மைப் பெயர்கள்.

## 18. கடிதம் எழுதுதல்




### அருஞ்சொற்பொருள்

| | |
|---|---|
| நலமாய் - சுகமாய் | கருத்தூன்றி-ஆழச் சிந்தித்து |
| மேன்மேலும் - மேலும் மேலும் | விடுமுறை - ஓய்வு நாள் |
| இறுதி - கடைசி | நீராடுவோம் - குளிப்போம் |
| தேர்வு - பரீட்சை | உரையாடி - பேசி |

### I. வினா-விடை

**1. கடிதத்தை எவ்வாறு தொடங்க வேண்டும்? எவ்வாறு முடிக்க வேண்டும்?**

கடிதத் தாளின் வலப்பக்கத் தலைப்பில் கடிதம் எழுதுபவர் தம் முகவரியைக் குறிக்க வேண்டும். எழுதும் நாளைத் தவறாமல் குறிக்க வேண்டும். பிறகு, அன்புள்ள, அன்புமிக்க என்னும் சொற்களைப் பயன்படுத்தி உறவு முறையையோ நட்பையோ குறித்துக் கடிதத்தைத் தொடங்கலாம். பிறகு தெரிவிக்க வேண்டிய செய்திகளை எழுதலாம். முடிக்கும்போது, தொடக்கத்தில் பயன்படுத்தியது போன்ற அன்புள்ள, அன்புமிக்க என்னும் சொற்களையும் உறவுமுறை, நட்பு முதலியவற்றையும் குறித்துக் கையொப்பம் இடவேண்டும். கடிதத் தாளின் அடியில், இடப்புறக் கோடியில், யாருக்குக் கடிதம் எழுதப்பட்டதோ அவருடைய முகவரியை எழுத வேண்டும்.

2. நீ உன் நண்பனுக்கு ஒரு கடிதம் எழுது.

17, தையப்பமுதலி தெரு,
சென்னை-1.
1–7–72.

அன்புள்ள நண்பன் முருகனுக்கு வணக்கம்.

இங்கு, நானும் மற்ற நண்பர்களும் நலம். உன் நலத்தை அறிய விரும்புகிறேன். இந்த விடுமுறையை நீ சேலத்தில் கழிப்பதுதான் நல்லது. வேறு இடங்களுக்குப் போக விரும்பாதே.

சேலத்தில் மேட்டூர் அணையையும், அதனை ஒட்டியுள்ள பெரிய தொழிற்சாலைகளையும் போய்ப் பார். மின் ஆற்றல் எடுக்கப்படும் விதத்தையும் நேரில் பார்த்துத் தெரிந்துகொள். நெசவாலைக்குச் சென்று, பஞ்சு துணியாக மாறும்வரை நடைபெறும் வேலைகளை நேரில் பார்த்து அறிந்துகொள். இவற்றை எல்லாம் உன் குறிப்பு ஏட்டில் குறித்து வைத்துக்கொள். மேல் வகுப்பில் கட்டுரை எழுத அவை நமக்குப் பயன்படும்.

விடுமுறை முடிவதற்கு ஐந்தாறு நாட்களுக்கு முன்னரே சென்னைக்கு வந்துவிடு.

உன் அன்புள்ள நண்பன்,
வேலன்.

முகவரி:
செல்வன் க. சு. முருகன்,
150, லாங்லி தெரு,
செவ்வாய்ப்பேட்டை, சேலம்-2.

II. வாக்கியங்களில் அமைத்து எழுது:

காலையிலும் மாலையிலும், புதியபுதிய, மேன்மேலும், அன்புகாட்டி.

நீ **காலையிலும் மாலையிலும்** வீட்டில் சிறிது நேரம் படிக்க வேண்டும்.

நாளிதழில் அன்றாடம் **புதியபுதிய** செய்திகள் வெளிவருகின்றன.

நாம் நம் அறிவை **மேன்மேலும்** வளர்த்துக்கொள்ள வேண்டும்.

என் நண்பர்கள் என்னிடம் மிகுந்த **அன்புகாட்டிப்** பழகுகின்றார்கள்.

**III. பிரித்து எழுது:**

காலாண்டு = கால் ஆண்டு
கருத்தூன்றி = கருத்து ஊன்றி
நடக்கவிருக்கும் = நடக்க இருக்கும்

### இலக்கணம்

1. நான் அழைத்தபோது நீ வரவில்லை.
2. நீங்கள் என்ன செய்தீர்கள்?

இவ் வாக்கியங்களில் வந்துள்ள முன்னிலைப் பெயர்களை எடுத்து எழுது.

நீ, நீங்கள் என்பவை இந்த வாக்கியங்களில் வந்துள்ள முன்னிலைப் பெயர்கள் ஆகும்.

## 19. சர்.சி.வி.இராமன்



### அருஞ்சொற்பொருள்

| | |
|---|---|
| அறிவியல் - விஞ்ஞானம் | ஈடுபாடு - தொடர்பு |
| புகைவண்டி - இரயில் வண்டி | பணியாற்றி - வேலை செய்து |
| பயின்றார் - கற்றார் | பொறுப்பு - பதவி |
| ஆர்வத்தோடு-விருப்பத்தோடு | சொற்பொழிவு - பெரும் பேச்சு |
| பௌதிகம் - இயற்கைத் தத்துவம் | பண்பு - குணம் |
| | வாழ்நாள் - ஆயுள் |

### I. வினா-விடை

**1. அறிவியலால் நாம் அடையும் நன்மை யாது?**

நமது வாழ்க்கைக்கு அறிவியல் பல வகையிலும் உதவியாய் இருக்கிறது. அறிவியல் ஆராய்ச்சியால்தான் புகைவண்டி, மின்விளக்கு வானொலி முதலிய பல நன்மைகளை நாம் பெற்றிருக்கிறோம்.

**2. சர். சி. வி. இராமன் பெற்றோர் யார்?**

சர். சி. வி. இராமனின் இயற்பெயர் வேங்கடராமன் என்பது. இவர் தந்தையார் பெயர் சந்திரசேகரர். தாயார் பெயர் பார்வதி அம்மையார். சர். சி. வி. இராமன் திருச்சிராப்பள்ளி நகரில் பிறந்தார்.

**3. சர். சி. வி. இராமன் எங்குக் கல்வி பயின்றார்?**

இவர் இளமையில் விசாகப்பட்டினத்தில் கல்வி பயின்றார். பின்னர்ச் சென்னையில் உள்ள மாநிலக்

கல்லூரியில் பயின்று எம்.ஏ. பட்டம் பெற்ருர். இவர் இளமையில் கல்வியை ஆர்வத்தோடு பயின்ருர்; பௌதிகத் துறையில் மிகுந்த ஈடுபாடு கொண்டார்; கல்லூரியில் படிக்கும்போது அறிவியல் கருத்துகளை ஆராய்ந்து அறிவதில் ஆர்வம் காட்டினுர்.

**4. சர். சி. வி. இராமன் பணியாற்றிய இடங்களைக் குறிப்பிடு.**

இராமன் முதலில் கல்கத்தாவில் உயர்ந்த அரசாங்க வேலையில் அமர்ந்திருந்தார். இரங்கூன், நாகபுரி முதலிய இடங்களிலும் இவர் பணியாற்றினுர். பிறகு மீண்டும் கல்கத்தாவுக்குப் பணியாற்ற வந்தார். அப்போது கல்கத்தாப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் அசுட்டோஷ் முக்கர்ஜீ என்பவர் இராமனைத் தம் பல்கலைக் கழகத்தில் அறிவியல் பேராசிரியராக அமர்த்தினுர்.

**5. சர். சி. வி. இராமன் கண்டுபிடித்த ஆய்வுக்குப் பெயர் என்ன?**

இவர் கண்டுபிடித்த ஆய்வுக்கு 'இராமன் விளைவு' என்பது பெயர். இந்த ஆராய்ச்சியை உலக அறிவியல் அறிஞர்கள் ஏற்றுக்கொண்டார்கள்.

**6. சர். சி. வி. இராமன் பெற்ற சிறப்புகள் எவை?**

இவர் திறமையைப் பாராட்டி அந்நாள் அரசாங்கம் இவருக்கு மிக உயர்ந்த பட்டமான சர் என்னும் பட்டம் அளித்துச் சிறப்பித்தது. உலகில் மிகப் பெரிய பரிசாகிய நோபெல் பரிசும் இவருக்கு வழங்கப்பட்டது.

**7. சர். சி. வி. இராமனின் பண்புகள் யாவை? அவர் கொள்கை யாது?**

அவர் அடக்கம், அன்பு, இரக்கம், நாட்டுப்பற்று, சுறுசுறுப்பு, பொறுமை, ஊக்கம் ஆகிய நல்ல பண்புகளைப் பெற்று விளங்கினுர். அறிவியல் ஆராய்ச்சியும் வளர்ச்சியும் மக்கள் நன்மைக்காகவே செய்யப்படவேண்டும் என்பது அவருடைய கொள்கையாகும்.

**II. ஒரே வாக்கியமாகச் சேர்த்து எழுது:**

இராமன் செயலாளர் பொறுப்பை ஏற்ருர். அவர் அறிவியல் ஆராய்ச்சிகளைச் செய்தார்.

இராமன் செயலாளர் பொறுப்பை ஏற்று அறிவியல் ஆராய்ச்சிகளைச் செய்தார்.

III. சர். சி. வி. இராமனே தம் வரலாற்றைக் கூறுவது போல இப்பாடத்தைச் சுருக்கி எழுது :

நான் திருச்சிராப்பள்ளி நகரத்தில் 84 ஆண்டுகளுக்கு முன் பிறந்தேன். எனக்குப் பெற்றோர் இட்ட பெயர் வேங்கடராமன். என் தந்தை பெயர் சந்திரசேகரர். தாயார் பெயர் பார்வதி அம்மையார்.

நான் இளமையில் விசாகப்பட்டினத்தில் பயின்றேன். பிறகு சென்னை மாநிலக் கல்லூரியில் பயின்று எம். ஏ. பட்டம் பெற்றேன். கல்லூரியில் படிக்கும்போதே அறிவியல் ஆராய்ச்சியிலும், பௌதிகத் துறையிலும் எனக்கு ஈடுபாடு மிகுதி.

நான் முதலில் பத்தாண்டுகள் கல்கத்தாவில் உயர்ந்த அரசாங்க வேலையில் அமர்ந்திருந்தேன். அவ் வேலையில் இருந்தபோதும் நான் அறிவியல் ஆராய்ச்சியை விட்டுவிடவில்லை. கல்கத்தாவில் இருந்த இந்திய அறிவியல் வளர்ச்சிக் கழகத்தில் சேர்ந்து இயற்கைத் தத்துவங்களை ஆராய்ந்து வந்தேன். பிறகு அக் கழகச் செயலாளர் பொறுப்பையும் ஏற்றேன். பிறகு இரங்கூன், நாகபுரி முதலிய இடங்களில் அரசாங்க வேலையில் இருந்தேன். அரசாங்க வேலையாக மறுபடியும் நான் கல்கத்தாவிற்கு வந்தேன்.

அப்போது, கல்கத்தாப் பல்கலைக் கழகத் துணை வேந்தராய் இருந்த அசுட்டோஷ் முக்கர்ஜீ என்னை அப் பல்கலைக்கழக அறிவியல் பேராசிரியராக அமர்த்தினர். நான் வெளிநாடுகளில் பல ஊர்களில் அறிவியல் தொடர்பாகச் சொற்பொழிவு ஆற்றியிருக்கிறேன்.

நான் ஆராய்ந்து கண்டுபிடித்த ஆய்வு ‘இராமன் விளைவு’ என்று என் பெயராலேயே வழங்குகிறது. இந்த ஆய்வை உலக அறிவியல் அறிஞர்கள் ஏற்றுக்கொண்டார்கள். நான் பெங்களூர் இந்திய அறிவியல் ஆராய்ச்சிக் கழகப் பௌதிகப் பகுதியின் தலைவராகவும் இருந்தேன். வைரத்தின் தன்மையை ஆராய்ந்து பல புதிய உண்மைகளைக் கண்டுபிடித்திருக்கிறேன்.

எனக்கு நோபெல் பரிசு வழங்கப்பட்டது. அந்நாள் அரசாங்கம் சர் என்னும் பட்டத்தை எனக்கு அளித்தது.

அறிவியல் ஆராய்ச்சியும் வளர்ச்சியும் மக்கள் நன்மைக்காகவே செய்யப்படவேண்டும் என்பதே என்னுடைய கொள்கையாகும்.

## இலக்கணம்

I. கீழ்வரும் வாக்கியங்களில் அமைந்துள்ள படர்க்கைப் பெயர்களை எடுத்து எழுது :

1. இராமன் திருச்சிராப்பள்ளி நகரத்தில் பிறந்தார்—இராமன், திருச்சிராப்பள்ளி, நகரம் என்பவை படர்க்கைப் பெயர்கள்.
2. மங்கை பாடினாள்.—மங்கை—படர்க்கைப் பெயர்.
3. மாணவர்கள் தேர்வில் வெற்றி பெற்றார்கள்.—மாணவர்கள், தேர்வு, வெற்றி என்பவை படர்க்கைப் பெயர்கள்.
4. புலி பசித்தாலும் புல்லைத் தின்னாது.—புலி, புல்—படர்க்கைப் பெயர்கள்.
5. குரங்குகள் மரம் ஏறும்.—குரங்குகள், மரம்—படர்க்கைப் பெயர்கள்.

II. கீழ்வரும் வாக்கியங்களிலுள்ள தன்மை, முன்னிலை, படர்க்கை இடப் பெயர்களை எடுத்துக் கட்டம் வரைந்து எழுது :

1. நான் வந்தபோது நீ எங்குச் சென்றாய் ?
2. சி. வி. இராமன் சிறந்த அறிஞர்.
3. இந்தப் பழங்கள் யாருடையவை ?
4. நீ பேசியதை அவன் கேட்டானா ?

| எண் | தன்மை | முன்னிலை | படர்க்கை |
|---|---|---|---|
| 1 | நான் | நீ | — |
| 2 | — | — | இராமன், அறிஞர் |
| 3 | — | — | பழங்கள் |
| 4 | — | நீ | அவன் |

20. 


### அருஞ்சொற்பொருள்

ஒய்ந்து - சோர்வடைந்து
வையாதே - திட்டாதே
கனிவு - மகிழ்ச்சி
பாதகம் - பெரும் பாவச் செயல்
அமிழ்து - மரணத்தை நீக்கும் மருந்து

ஆன்றோர் - பெரியோர்
தொழுது - வணங்கி
இந்துஸ்தானம் - இந்தியா
தினமும் - ஒவ்வொரு நாளும்
குலத்தாழ்ச்சி உயர்ச்சி - குலத்தால் உண்டாகும் தாழ்வும் உயர்வும்
மதி - அறிவு

### வினா-விடை

**1. பாரதியாரைப் பற்றி இரண்டு வாக்கியங்கள் எழுது.**

சி. சுப்பிரமணிய பாரதியார் எட்டயபுரத்தைச் சேர்ந்தவர். இவர் அழகிய கவிதைகள் பல பாடி, மக்கள் மனத்தில் நாட்டுப்பற்று உண்டாகும்படி செய்தார்.

**2. காலையும் மாலையும் பாப்பா என்ன செய்ய வேண்டும்?**

காலை எழுந்தவுடன் படிக்கவேண்டும். பிறகு மகிழ்ச்சி தரும் நல்ல பாட்டுப் பாட வேண்டும். மாலை முழுவதும் விளையாடவேண்டும்.

**3. தமிழ்நாட்டைப் பற்றிப் பாரதியார் கூறுவது யாது?**

தமிழ்நாட்டைப் பெற்ற தாய் எனக் கும்பிடவேண்டும். அது நமது ஆன்றோரின் தேசம். அது அமிழ்தினைவிட இனிமையானது.

**4. தமிழ், இந்தியா—இவை பற்றிப் பாரதியார் கூறுவது யாது?**

தமிழ்ச் சொற்களே, சொற்களுள் உயர்வானவை. ஆகையால் தமிழை வணங்கிப் படிக்கவேண்டும். இந்தியா செல்வம் நிறைந்த நாடு. ஆகையால், அதை நாள்தோறும் புகழவேண்டும்.

**5. பாரதியார் கூறும் மேலோர் யார்?**

சாதிகள் இல்லை. குல உயர்வு தாழ்வு சொல்லுதல் பாவம். நீதி, உயர்ந்த அறிவு, சிறந்த கல்வி, அன்பு நிறைந்து உள்ளவர்களே மேலோர்.

## 21. ஒற்றுமையின் உயர்வு



### அருஞ்சொற்பொருள்

இலகுபதனன் - எளிதாகப் பறப்பவன்
இரை - தீனி
விளைவிப்பவன் - உண்டாகும்படி செய்பவன்
அஞ்சியது - பயந்தது

| | |
|---|---|
| தூவினன் - தெளித்தான் | முறையன்று - சரியாகாது |
| அமர்ந்திருந்து - உட்கார்ந்து | அறியாமை - மூடத்தனம் |
| சித்திரக்கிரீவன் - அழகிய கழுத்தை உடையவன் | விடுபட - விடுதலையடைய |
| புதர் - அடர்ந்து இருக்கும் குறுஞ்செடிகள் | சோலை - தோட்டம் |
| சிதறி - இறைந்து | இரணியகன் - பொன் உடையவன் |
| ஐயம் - சந்தேகம் | வியப்படைந்து - ஆச்சரியப் பட்டு |
| கிட்டாது - கிடைக்காது | கூரிய - கூர்மையான |

## I. வினா-விடை

**1. இலகுபதனன் எங்கு வசித்தது?**

கோதாவரி ஆற்றங்கரையில் பெரிய காடு இருந்தது. அக் காட்டில் இருந்த வன்னிமரத்தில் இலகுபதனன் என்னும் காக்கை கூடுகட்டி வாழ்ந்தது.

**2. வேடன் என்ன செய்தான்?**

வேடன் மரத்தடியில் பெரிய வலையை விரித்தான்; அதில் நெல்லைத் தூவினன்; பிறகு சிறிது தொலைவில் ஒரு புதர்மறைவில் பதுங்கியிருந்தான்.

**3. இலகுபதனன், சித்திரக்கிரீவன், இரணியகன்—பொருள் என்ன?**

இலகுபதனன் - எளிதாகப் பறப்பவன். சித்திரக் கிரீவன் - அழகிய கழுத்தை உடையவன். இரணியகன் - பொன் உடையவன்.

**4. காட்டில் சிதறிக்கிடந்த நெல்லைக் கண்டு சித்திரக் கிரீவன் ஏன் ஐயம் கொண்டது?**

சித்திரக்கிரீவன் புறாக்களின் அரசு. கூட்டமாய் வந்து மரத்தின்மீது உட்கார்ந்த புறாக்கள் கீழே நெல் சிதறிக் கிடப்பதைக் கண்டன. அவற்றைத் தின்ன விரும்பின. ஆனால் சித்திரக்கிரீவன், "மக்கள் நடமாட்டமே இல்லாத காட்டில் நெல் எப்படி வந்திருக்கும்? யாரோ வலையை விரித்து நெல்லைத் தெளித்து வைத்திருக்க வேண்டும்!" என்று ஐயம் கொண்டது.

**5. கோபம் கொண்ட கிழப்புறா என்ன கூறியது?**

சித்திரக்கிரீவன் கூறியதை மற்றப் புறாக்கள் ஒப்புக் கொண்டன. ஆனால் ஒரு கிழப் புறா, "இப்படியே ஒவ்வொன்றிலும் ஐயப்பட்டு ஆராய்வது என்றால் நமக்கு இரையே அகப்படாது. ஐயம் உள்ளவர்கள் எப்போதும் துன்பம் உடையவர்களாகவே இருப்பார்கள். நம் தலைவன்

சொல்லியதுபோல் நடந்தால் நாம் பட்டினிகிடந்து சாக வேண்டியதுதான்'' என்று கோபத்தோடு கூறியது.

**6. தப்புவதற்குச் சித்திரக்கிரீவன் கூறிய உபாயம் யாது?**

சித்திரக்கிரீவன் தன் கூட்டம் வலையில் சிக்கியது கண்டு வருந்தியது. தான் மட்டும் தனியே இருக்க விரும்பாமல் அதுவும் வலையிற் சிக்கிக்கொண்டது. அச்சமயம் மகிழ்ச்சியுடன் வந்த வேடனைக் கண்ட புறாக்கள் அஞ்சி நடுங்கின; அவை சித்திரக்கிரீவனைப் பார்த்துத் தப்ப வழி கூறுமாறு வேண்டின. சித்திரக்கிரீவன், "நாம் ஒற்றுமையாய் இருந்து இந்த வலையோடு பறந்து செல்ல வேண்டும். இதுதான் தப்ப வழி. வேறு இடம் சென்று வலையிலிருந்து விடுபடலாம்'' என்று கூறியது.

**7. வேடன் என்ன கூறி வருந்தினான்?**

சித்திரக்கிரீவன் சொன்னபடி புறாக்கள் ஒற்றுமையாய் வலையுடன் பறந்தன. வேடன் ஏமாற்றம் அடைந்து புறாக்கள் போன திசையில் ஓடினான். ஆனால் அவை வேகமாய்ப் பறந்து மறைந்துவிட்டன. வேடன், "புறாக்கள் பிடிக்கப் போய் என் வலையை இழந்து விட்டேனே!'' என்று வருந்தி வீடு போய்ச் சேர்ந்தான்.

**8. புறாக்களுக்கு இரணியகன் எவ்வாறு உதவியது?**

புறாக்கள் வலையுடன் பறந்து, சித்திரக்கிரீவன் கூறியபடி ஓர் ஆற்றங்கரைக்கு வந்தன; அங்கிருந்த அழகிய சோலையில் இறங்கின. அச்சோலையில் இரணியகன் என்னும் எலி ஒரு வலையில் வசித்தது. அது சித்திரக்கிரீவனின் நண்பன். அது தன் நண்பனுக்கும் மற்றப் புறாக்களுக்கும் உண்டான துன்பத்தை அறிந்து வருந்தியது; உடனே பல எலிகளை அழைத்து வந்தது. அந்த எலிகள் தம் கூர்மையான பற்களால் வலையைக் கடித்துப் புறாக்களை விடுவித்தன.

**9. இப் பாடம் உணர்த்தும் நீதி என்ன?**

'ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு' என்னும் நீதியை இப் பாடம் உணர்த்துகிறது.

## II. வாக்கியங்களில் அமைத்து எழுது:

கூரிய, கூறிய ; வலை, வளை ; இரங்கி, இறங்கி.

ஊசியின் கூரிய முனை என்னைக் குத்திவிட்டது.
தம்பி கூறிய செய்தி வேடிக்கையானது.

கந்தன் வலை வீசி மீன் பிடித்தான்.
நண்டு வளையில் வசிக்கும்.
அவன் படும் துன்பம் கண்டு நான் இரங்கினேன்.
வேலன் மாடியிலிருந்து கீழே இறங்கினான்.

III. சேர்த்தெழுது:

புரு + கூடு = புருக்கூடு
தப்பி + செல்ல = தப்பிச்செல்ல
பிடிக்க + போய் = பிடிக்கப்போய்
போய் + சேர்ந்தான் = போய்ச்சேர்ந்தான்

## 22. தில்லையாடி வள்ளியம்மை



### அருஞ்சொற்பொருள்

நூற்றாண்டு - நூறு ஆண்டு
பிழைப்புக்காக - வாழ்வதற்காக
ஆண்டவர்கள் - ஆட்சி செய்தவர்கள்
குடியிருப்பு - வாழும் இடம்
அறப்போர் - அறவழியில் செய்யும் கிளர்ச்சி
போராடிய - கிளர்ச்சி செய்த
மாண்டான் - இறந்தான்
நாடு கடத்தல் - நாட்டைவிட்டு வெளியேற்றுதல்
தொல்லைகள் - துன்பங்கள்
ஆளானான் - உட்பட்டான்
தணியவில்லை - குறையவில்லை
தயாராய் - ஆயத்தமாய்
துணிவு - தைரியம்
வீராங்கனை - வீரப்பெண்
சித்தமாயிருக்கிறேன் - மன உறுதியோடு இருக்கிறேன்
வரலாறு - சரித்திரம்
சுற்றத்தார் - உறவினர்
அவல வாழ்வு - துன்ப வாழ்வு
சூளுரை - சபதம்
கோலம் - அழகு
பல்லாயிரவர் - பல ஆயிரம் பேர்

### I. வினா விடை

**1. தில்லையாடி எங்குள்ளது?**

தில்லையாடி என்பது தஞ்சை மாவட்டத்தில் செம்பொனார் கோவிலை அடுத்த ஒரு சிற்றூர். இது வள்ளியம்மையை உலகுக்குத் தந்த நல்ல ஊர்.

**2. வள்ளியம்மை யார்?**

சென்ற நூற்றாண்டில் தில்லையாடியிலிருந்து பிழைப்புக்காகத் தென்னாப்பிரிக்காவுக்குச் சென்று குடியேறிய தமிழர்களுள் ஒருவர் வள்ளியம்மை.

**3. கறுப்பர்களுக்கு வெள்ளையர் செய்த கொடுமைகள் எவை?**

தென்னாப்பிரிக்காவில் வாழ்ந்தவர்களுள் கறுப்பு நிறமுடைய மக்கள் பலர். ஆனால், அவர்களை ஆண்டவர்களோ வெள்ளையர்கள். வெள்ளையர்கள் கறுப்பர்களை வெறுத்து ஒதுக்கினார்கள்; தாழ்வாகக் கருதினார்கள்; வெள்ளையர் உண்ணும் உணவு விடுதிகளிலோ, பயணம் செய்யும் இரயில் பெட்டிகளிலோ கறுப்பர்கள் சமமாக உடன் இருக்கக்கூடாது என்றும், ஒதுங்கி வாழும்படியும் சட்டம் செய்தார்கள்.

**4. தென்னாப்பிரிக்காவில் நடந்த அறப்போரில் பங்கு கொண்ட தமிழர் மூவர் யார்?**

தென்னாப்பிரிக்காவில் கறுப்பர்களின் உரிமைக்காக வெள்ளையருடன் அறப்போர் நடத்திய காந்தியடிகளுக்குத் துணை நின்று அறப்போரில் ஈடுபட்ட தமிழருள் வள்ளியம்மை, நாகப்பன், நாராயணசாமி என்னும் மூவர் குறிப்பிடத்தக்கவர்கள்.

**5. வெள்ளையர் ஆட்சி இந்த மூவருக்குச் செய்த கொடுமைகள் யாவை?**

வெள்ளையர் ஆட்சி வள்ளியம்மையைச் சிறையில் அடைத்தது. நாகப்பனை நாடு கடத்தியது. அதனால் நாகப்பன் மாண்டான். நாராயணசாமிக்குப் பலவகையான தொல்லைகள் கொடுத்தது. வள்ளியம்மை சிறையின் கொடுமையைத் தாங்காமல் கடுமையான நோய்க்கு ஆளானாள். அவள் சிறையில் இறந்து விடுவாளோ என்று அஞ்சிய ஆட்சியினர் அவளை விடுதலை செய்தனர். எனினும் அவள் நோய் தணியவில்லை.

**6. "மீண்டும் சிறை செல்லத் துணிவு உண்டா?" என்று கேட்ட காந்தியடிகளுக்கு வள்ளியம்மை கூறிய விடை யாது?**

மரணப்படுக்கையில் இருந்த வள்ளியம்மையைக் காந்தியடிகள் கண்டார். அவள் நிலை கண்டு கண்ணீர் சிந்தினார். "நீதிக்காக இது போன்ற துன்பங்களைத் தாங்கிக்கொள்ள இன்னும் நான் தயாராய் இருக்கிறேன்" என்று வள்ளியம்மை கூறினாள். "அப்படியானால் மீண்டும் ஒரு முறை சிறை செல்ல உமக்குத் துணிவு உண்டா?" என்று காந்தியடிகள் கேட்டார்.

"ஒரு முறை யென்ன? பலமுறை சிறை செல்லச் சித்தமாயிருக்கிறேன்" என்று வள்ளியம்மை உணர்ச்சியோடு கூறினாள். உடனே அவள் உயிர்பிரிந்தது. அப்போது அவளுக்கு வயது 16.

**7. காந்தியடிகள் கூறிய சூளுரை யாது?**

காந்தியடிகள் தமிழ்நாட்டிற்கு வந்தபோது, தில்லையாடிக்குச் சென்றார்; வள்ளியம்மை முதலிய மூவரின் சுற்றத்தாரையும் கண்டார். தாழ்த்தப்பட்டுக் கிடந்த அந்த ஏழைகளின் துன்ப வாழ்வு அடிகளின் உள்ளத்தைத் தொட்டது. "தாழ்த்தப்பட்டவரின் முன்னேற்றத்துக்காக இனிப் பாடுபடுவேன்" என்று அவர் சூளுரை கூறினார்.

**8. தில்லையாடியில் யார் யார் பெயரால் நினைவுச் சின்னங்கள் அமைக்கப்பட்டுள்ளன?**

தில்லையாடியில் வள்ளியம்மை நகர், வள்ளியம்மை மண்டபம், வள்ளியம்மை உயர்நிலைப்பள்ளி, நாராயணசாமி மாணவர் இல்லம், நாகப்பன் நகர் என்பவை நினைவுச் சின்னங்களாக அமைக்கப்பட்டன.

**9. தில்லையாடியின் சிறப்புக்களைக் குறிப்பிடு.**

இராம நாடகம் இயற்றிய அருணாசலக் கவிராயர் பிறந்தது தில்லையாடியே. காந்தியடிகளுக்குத் தமிழ் கற்றுத்தந்த கன்னியப்ப செட்டியார் பிறந்ததும் இவ்வூரே. கப்பலோட்டிய தமிழர் வ.உ. சிதம்பரனாருக்குத் தென்னாப்பிரிக்காவில் இருந்து கொண்டே அவ்வப்போது பண உதவி செய்து வந்த வேதியப்பிள்ளை பிறந்ததும் இவ்வூரே.

**II. எதிர்ச்சொற்கள் எழுது:**

கறுப்பர், பலர், பெரிய.

கறுப்பர் × வெள்ளையர்; பலர் × சிலர்; பெரிய × சிறிய.

## இலக்கணம்

கீழ்வரும் வாக்கியங்களில் உள்ள பெயரெச்ச, வினையெச்சங்களை எடுத்துக் கட்டத்தில் எழுது:

1. கனிந்த பழம் விழுந்தது.
2. ஓடிய குதிரை நின்றது.

3. கேட்டு அறிந்தான்.
4. மென்று தின்றான்.

| பெயரெச்சம் | வினையெச்சம் |
|---|---|
| கனிந்த<br>ஓடிய | கேட்டு<br>மென்று |

# 23.  பழமொழிகள்

## அருஞ்சொற்பொருள்

அகம் - மனம்
அடாது - தகாது
இக்கரை - அருகில் உள்ள கரை
அக்கரை - தொலைவில் உள்ள கரை
முதுமை - வயது முதிர்ந்த நிலை
பாதாளம் - கீழ் உலகம்
ஊர - ஊர்ந்து செல்ல
பொறை - பொறுமை
காரியம் - செயல்

## வினா—விடை

**1. 'ஆனைக்கும் அடி சறுக்கும்'—இப் பழமொழியால் நீ அறியும் கருத்து யாது?**

எவ்வளவு வல்லமை உடையவராயிருந்தாலும் சில சமயங்களில் தவறிவிட நேரிட்டுவிடும் என்பது இப் பழமொழியால் அறியப்படுகிறது.

**2. 'காலம் போகும் வார்த்தை நிற்கும்'—இதன் பொருளை விளக்கி எழுது.**

நாம் ஏதாவது சொன்னால், நாம் சொன்ன காலம் போய்விடும். ஆனால் நாம் சொன்ன சொல் மாறாமல் அப்படியே நிலைத்துநிற்கும் என்பதே இதன் பொருள்.

**3. வேறு நான்கு பழமொழிகளை எழுது:**

1. அளவுக்கு மிஞ்சினால் அமுதமும் நஞ்சு.
2. ஆற்றில் கொட்டினாலும் அளந்து கொட்டு.
3. இரும்படிக்கிற இடத்தில் ஈக்கு என்ன வேலை?
4. கூழானாலும் குளித்துக் குடி.

# 24 காகமும்  நாகமும்

(பஞ்சதந்திரப் பாடல்)

## அருஞ்சொற்பொருள்

கோடு - கொம்பு
உறு - பொருந்திய
சினை - கிளை
பேடு - பெட்டை
ஆடு இயல் - ஆடும் தன்மையுள்ள
நாடி - விரும்பி
நலிந்து - வருந்தி
உளம் - மனம்
பாங்கன் - தோழன்
சம்புகன் - நரி
அருகு - பக்கத்தில்
அரிதோ - அருமையோ
மன்னவன்தேவி - அரசி
ஆடும் - குளிக்கும்
மஞ்சனச்சாலை-நீராடும் இடம்
புக்கு - புகுந்து
பொன் அணி - தங்க நகை
காவலன் - அரசன்
ஏவலாளர்-கட்டளைப்படி நடப்பவர்
ஏகி - சென்று
ஈர்ந்தனர் - பிளந்தனர்
நறுக்கினர் - வெட்டினர்

**இக் கதையினை உரைநடையில் வரைக.**

ஒரு மாமரக் கிளையில் ஒரு காகம் கூடு கட்டி நெடுங் காலமாகத் தன் பெண் காகத்துடன் வாழ்ந்துகொண்டிருந்தது. அந்த மரப் பொந்தில் இருந்த கரும்பாம்பு ஒன்று, பெண் காகம் இடும் முட்டைகளை எல்லாம் குடித்துவிட்டுப் போய்விடும்.

காகம் மிகவும் வருந்தி மனம் நொந்து தன் உயிர்த் தோழனாகிய நரியிடம் சென்றது; செய்தியைக் கூறியது; "என்ன செய்வேன் நான்!" எனச் சொல்லிவருந்தியது.

அதைக் கேட்ட நரி, "இதைக் கொல்வது அருமையானதா? நீ போய் அரசி குளிக்குமிடத்தில் புகுந்து, அவளுடைய பொன்நகை ஒன்றை அவள் காணுமாறு கொண்டுவந்து பாம்பின் பொந்தில் போடு!" என்றது.

காகம் அப்படியே செய்தது. காகத்தை விரட்டி வந்த அரசனின் ஏவலாளர்கள், மாமரத்தின் பொந்தைப் பிளந்தார்கள். உள்ளே இருந்த நாகப்பாம்பு சீறியெழுந்தது. ஏவலாளர் அதனை இரு துண்டாக நறுக்கிப் போட்டனர்.

எனவே, உபாயத்தால் ஆகாதது ஒன்றுமில்லை என்பதை அறிதல் வேண்டும்.

# 25.  வீரராய் விளங்குவோம்

## அருஞ்சொற்பொருள்

அண்ணல்-பெருமையில் சிறந்தவர்
அடிகள் - மதிப்புக்கு உரிய பெரியவர்
அன்னையார் - தாயார்
பதறுவார் - மனம் கலங்குவார்
தீண்டாமை-தொடாதிருத்தல்
கண்டித்தார் - வெறுத்துப் பேசினார்
அறவே - முழுதும்
நெறிகள் - வழிகள்
கருதவும் - நினைக்கவும்
முற்போக்கு - முன்னேற்றம்
தகர்க்கும் - அழிக்கும்

## வினா-விடை

**1. அடிகளுக்கு அன்னையார் இட்ட கட்டளை யாது?**

காந்தி அடிகள் வீட்டுக் கொல்லைப்புறத்தை உகா என்பவர் சுத்தம் செய்து வந்தார். அவரைத் தீண்டத் தகாதவர் என்று காந்தி அடிகளின் பெற்றோர் கூறினர். 'அவனைத் தொடாதே!' என்று கூறி அடிகளைக் கட்டுப்படுத்தினர். தப்பித்தவறி எப்போதாவது காந்தி அடிகள் உகாவைத் தொட்டுவிட்டால் அடிகளின் அன்னை பதறுவார். உடனே அடிகளைக் குளித்துவிட்டு வரக் கட்டளை இடுவார்.

**2. அடிகள் என்ன செய்தார்?**

சிறுவராய் இருந்தபோதே அடிகள் தீண்டாமையைக் கண்டித்தார். பெரியவரானதும் அதை அறவே நீக்கப் பாடுபட்டார்.

**3. நாம் எப்படி விளங்க வேண்டும்?**

மனிதருள் சிலரைத் தீண்டத் தகாதவர் என்பது தவறு. மனிதரைப் பல சாதியினராகப் பிரிப்பதும் தவறு. சாதி வேறுபாடு, தீண்டாமை ஆகியவை தவறான நெறிகள். அவற்றை எவரும் கருதவும் கூடாது. அவற்றை ஒழிக்கவே நாம் அனைவரும் உழைக்க வேண்டும். சாதி வேற்றுமை நமக்கும் நம் நாட்டிற்கும் செய்துள்ள தீமை மிகுதி. எனவே, தடைக்கல்லாக உள்ள சாதியைத் தகர்க்கும் வீரராய் நாம் விளங்குவோம்.

4. விவேகானந்தர் சாதி வேற்றுமை பற்றி என்ன கூறுகிறார் ?

"இந்தியாவின் முற்போக்குக்குச் சாதிவேற்றுமை ஒரு தடைக்கல் போன்றது. அது வாழ்வைக் கட்டுப் படுத்துகிறது. பிரிவினை செய்கின்றது" என்று விவேகானந்த அடிகள் கூறியுள்ளார்.

## இலக்கணம்

கீழ்வரும் வாக்கியங்களிலிருந்து வினைமுற்று, பெயரெச்சம், வினையெச்சம் என்பவற்றை எடுத்துக் கட்டத்தில் எழுது :

1. ஒருவர் கொல்லைப்புறத்தைச் சுத்தம் செய்து வந்தார்.
2. காந்தியடிகள் தாம் எண்ணிய கருத்தை அன்னையாரிடம் கூறுவார்.
3. நீ அவரைப் பார்த்து என்ன கேட்டாய்?
4. ஒருநாளும் வாராத பெரியவர் வந்தார்.
5. கல்லாத சிறுவர் பின்பு வருந்துவர்.

| எண் | வினைமுற்று | பெயரெச்சம் | வினையெச்சம் |
|---|---|---|---|
| 1. | வந்தார் | — | செய்து |
| 2. | கூறுவார் | எண்ணிய | — |
| 3. | கேட்டாய் | — | பார்த்து |
| 4. | வந்தார் | வாராத | — |
| 5. | வருந்துவர் | கல்லாத | — |




# 26. கண்ணகி வழக்கு உரைத்தது



## அருஞ்சொற்பொருள்

**பாண்டிமாதேவி** - பாண்டிய அரசி
**புழுதி** - தூளாக இருக்கும் மண்
**அறிவற்று** - அறிவு இல்லாமல்
**மன்னன் கோவில்** - அரண்மனை
**வாயிலோய்** - வாயில் காவலனே

கடையகம் - முன்வாயில்
செழியரே-பாண்டிய மன்னரே
கடுஞ்சீற்றத்தாள் - கடுமையான கோபமுடையவள்
தராசுத் தட்டில் ஏறினவன் - சிபி என்னும் பேரரசன்
துயர் - துன்பம்
தேர்க்கால் - தேரின் சக்கரம்
ஊர்ந்தான்-தேரைச் செலுத்தினன்
மற்ஞெருரு மன்னன் - மனுநீதி கண்ட சோழன்
முறை வழுவாத - நீதி தவருத
அரசு ஓச்சிய - ஆட்சி செலுத்திய
புகார் - காவிரிப்பூம்பட்டினம்
பெருங்குடி - வணிகர் இனத்தில் ஒரு பிரிவு
கள்வன் - திருடன்
பரல் - சிலம்பின் உள்ளே இடும் பருக்கைக் கற்கள்
துணுக்குற்று - அஞ்சி
ஆயுள் முடிக - உயிர் அழிக
பிரவாற்ருது - பிரிவைத் தாங்க முடியாமல்
சீற்றத்துடன் - கோபத்துடன்

## விஞ-விடை

**1. கண்ணகி என்பவள் யார் ?**

கண்ணகி என்பவள் கோவலனின் மனைவி; மாநாய்கன் என்னும் வணிகரின் மகள். மாசாத்துவான் என்னும் பெருங்குடி வணிகரின் மருமகள். அவளுடைய ஊர் பூம்புகார்.

**2. வாயிற்காவலன் கண்ட கண்ணகியின் தோற்றம் எவ்வாறு இருந்தது ?**

புழுதிபடிந்த உடை; விரிந்த கருங்கூந்தல்; அழுத கண்ணீர் ; வலக்கையில் ஒற்றைச் சிலம்பு ; காளிபோன்ற கடுஞ்சீற்றம். இதுதான் வாயில் காவலன் கண்ட கண்ணகியின் தோற்றம்.

**3. வாயிற்காவலனிடம் கண்ணகி கூறியது யாது ?**

" அறிவில்லாமல் நீதி தவறிய மன்னனின் கோயிலைக் காத்து நிற்கும் வாயிலோயே! கையிற் சிலம்பு ஒன்று ஏந்தியவள் — கணவனை இழந்தவள் — கடையகத்தாள் என்று மன்னனுக்குத் தெரிவி!" என்று கண்ணகி வாயிற் காவலனிடம் கூறினுள்.

**4. 'யார் நீ ?' என்ற மன்னனுக்குக் கண்ணகி கூறிய விடை யாது ?**

"தெளிந்த அறிவில்லாத மன்னனே! ஒரு புருவுக்காகத் தன்னையே தரத் தராசுத் தட்டில் ஏறினன் ஒரு மன்னன். கன்றை இழந்த தாய்ப் பசுவின் துயரைப் போக்கத் தன் ஒரே மகனைத் தானே தேர்க்காலில் இட்டு ஊர்ந்தான் மற்ஞெருரு மன்னன். முறை வழுவாத அந்த மன்னர்கள் இருந்து அரசு செலுத்திய புகார் என்னும்

நகரம் என் ஊர். புகழ்பெற்ற பெருங்குடியில் பிறந்தவர் என் கணவர். நாங்கள் வாழ்வதற்காகக் கைமுதல் வேண்டி, என் காற்சிலம்பை விற்க வந்தபோது, உன்னால் கொல்லப்பட்டார் என் கணவர். கோவலர் என்பது அவர் பெயர். நான் கண்ணகி'' என்று கண்ணகி பாண்டிய மன்னனுக்கு விடை கூறினாள்.

5. பாண்டியன் தன் தவற்றை எவ்வாறு உணர்ந்தான்?

"கள்வனைக் கொல்லுதல் குற்றம் அன்று. அதுவே அரச நீதி!'' என்றான் பாண்டியன். "என் கணவர் கள்வர் அல்லர். என் காற்சிலம்பின் உள்ளிருக்கும் பரல் மாணிக்கம்'' என்றாள் கண்ணகி. "எம் அரசியின் சிலம்பில் இருப்பது முத்து'' என்று கூறிய பாண்டியன், தான் கைப்பற்றிய சிலம்பைக் கண்ணகியிடம் கொடுக்கச் செய்தான். கண்ணகி அச்சிலம்பைக் கையில் வாங்கி, ஓங்கி உடைத்தாள். சிலம்பின் உள்ளிருந்த மாணிக்கம் பாண்டியன் உதட்டில் தெறித்தது. பாண்டியன் தன் தவற்றை உணர்ந்து அஞ்சி, "நானோ அரசன்! நானே கள்வன். பாண்டியர் குலம் என்னால் நீதி தவறியது. என் ஆயுள் முடிக'' என்று கூறி உயிர் நீத்தான்.

6. பாண்டிமாதேவி என்ன சொல்லி உயிர் விட்டாள்?

பாண்டியனின் பிரிவாற்றாத பாண்டிமாதேவி, "ஐயோ! கணவனை இழந்த இவளுக்கு என்னால் என்ன ஆறுதல் கூற இயலும்!'' என்று கூறி உயிர் விட்டாள்.

## பயிற்சி

I. கீழ்வரும் வாக்கியத்தில் உரிய இடங்களில் காற்புள்ளி, முற்றுப்புள்ளி இடு:

திலகர், கோகலே, காந்தியடிகள், சிதம்பரனார் போன்ற பெருமக்கள், நம் நாடு விடுதலையடைய அரும்பாடு பட்டார்கள்.

II. பின்வரும் வாக்கியங்களில் ஏற்ற நிறுத்தக் குறிகளை இட்டு எழுது:

1. "நீ எப்போது வந்தாய்?'' என்று என்னை ஆசிரியர் கேட்டார்.
2. பாண்டியன், "நீ யார்?'' என்று கண்ணகியை வினவினான்.

# செய்யுட்பாடம்

# I. நீதிப் பகுதி

## 1. நல்வழி

இந் நூலை எழுதியவர் ஔவையார் என்னும் தமிழ்ப் பெரும் புலவர் ஆவார். இது நாற்பது வெண்பாக்கள் உடையது. ஒழுக்க வழிகளைக் கூறுவதால் இதற்கு நல்வழி என்னும் பெயர் வந்தது.

### சாதி இரண்டே

சாதி இரண்டொழிய வேறில்லை, சாற்றுங்கால்
நீதி வழுவா நெறிமுறையில்—மேதினியில்
இட்டார் பெரியோர் ; இடாதார் இழிகுலத்தோர் ;
பட்டாங்கில் உள்ள படி. (1)

#### சொற்பொருள்

சாற்றுங்கால் - (ஆராய்ந்து) சொல்லுமிடத்து
மேதினியல் - இந்த உலகத்தில்
சாதி இரண்டு ஒழிய - சாதிகள் இரண்டே தவிர
வேறு இல்லை - வேறு ஒன்றும் இல்லை
நீதி வழுவா - நீதி தவறாத
நெறிமுறையின் - நல்ல வழி நின்று முறையோடு
இட்டார் - (இல்லாதவருக்குக்) கொடுப்பவர்
பெரியோர் - மேல் சாதியார்
இடாதார் - கொடாதவர்
இழிகுலத்தோர் - கீழ்ச் சாதியார்
பட்டாங்கில் - உண்மையை விளக்கும் நூல்களில் (இது)
உள்ளபடி - சொல்லியுள்ளபடி ஆகும்.

(கருத்துரை) ஏழைகளுக்குக் கொடுப்பவர் உயர்ந்த சாதி ; கொடாதவர் தாழ்ந்த சாதி எனச் சாதிகள் இரண்டே. இவை தவிர உலகில் வேறு சாதியில்லை.

## 'இல்லை' என்று சொல்லாமல் கொடுப்பவர்

ஆற்றுப் பெருக்குஅற்று அடிசுடும்அந் நாளும்அவ்வாறு
ஊற்றுப் பெருக்கால் உலகுஊட்டும்—ஏற்றவர்க்கு
நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தா ராலும்
'இல்லை'என மாட்டார் இசைந்து. (2)

சொற்பொருள்

ஆற்றுப் பெருக்கு அற்று-ஆற்றின் வெள்ளம் வற்றி
அடி சுடும் - (நடப்பவரின்) பாதங்களைச் சுடுகின்ற
அந்நாளும் - அக் காலத்திலும்
அவ்வாறு ஊற்றுப் பெருக்கால் - அந்த ஆருனது ஊற்றிலிருந்து சுரக்கும் நீரினல்
உலகு ஊட்டும் - உலகின் உயிர்களை உண்பிக்கும்
நல்லகுடிப் பிறந்தார் - உயர் குடியில் பிறந்தவர்
நல்கூர்ந்தார் ஆனலும் - வறுமை அடைந்தாலும்
ஏற்றவர்க்கு - இரந்தவர்க்கு
இசைந்து இல்லை என மாட்டார் - மனம் ஒப்பி இல்லை என்று சொல்லமாட்டார்

(க - ரை.) உயர்ந்த குடும்பத்தில் பிறந்த பெரியார் வறுமை அடைந்த காலத்திலும் இல்லையென்று சொல்லாமல் முடிந்தவரை பிறருக்கு உதவி செய்வார்கள்.

## பசித் துன்பம்

'ஒருநாள் உணவைஒழி,' என்ருல் ஒழியாய் ;
'இருநாளைக்கு ஏல்'என்ருல் ஏலாய் ;—ஒருநாளும்
என்னேவு அறியாய் ; இடும்பைகூர் என்வயிறே !
உன்னேடு வாழ்தல் அரிது. (3)

சொற்பொருள்

இடும்பைகூர் - (மிகுந்த) துன்பம் தருகின்ற
என் வயிறே - என்னுடைய வயிறே !
ஒருநாள் உணவு - (கிடையாத போது) ஒரு நாளைக்கு உணவை
ஒழி என்ருல் - விட்டு இரு என்ருல்
ஒழியாய்-விட்டிருக்கமாட்டாய்
இரு நாளைக்கு - (கிடைத்த போது) இரண்டு நாளைக்கு
ஏல் என்ருல் - (சேர்த்து) ஏற்றுக்கொள் என்ருல்
ஏலாய் - ஏற்றுக்கொள்ள மாட்டாய்
ஒருநாளும் - ஒரு நாளிலாவது
என் நோவு - என்னுடைய துன்பத்தை
அறியாய் - அறியமாட்டாய்
உன்னேடு - உன்னேடு
வாழ்தல் - கூடி வாழ்வது
அரிது - எனக்கு அரிதாக இருக்கிறது

(க - ரை ) வயிற்றுக்குச் சோறு தேடி அதனைத் திருப்தி செய்வதைவிட அரிய செயல் வேறு ஒன்றும் இல்லை.

## உழவின் உயர்வு

ஆற்றங் கரையின் மரமும் அரசறிய
வீற்றிருந்த வாழ்வும் விழும்அன்றே?—ஏற்றம்
உழுதுண்டு வாழ்வதற்கு ஒப்பில்லை கண்டீர்;
பழுதுண்டு வேறோர் பணிக்கு. (4)

சொற்பொருள்

ஆற்றங்கரையின் - ஆற்றின் கரையில் உள்ள
மரமும் - பெரிய (மரமும்)
அரசு அறிய - அரசன் மதிக்கும்படி
வீற்றிருந்த வாழ்வும் - உயர்வாக இருந்த வாழ்வும்
விழும் அன்றே - அழியும் அல்லவா? (ஆதலால்)
ஏற்றம் - உயர்வான வாழ்க்கை
உழுது உண்டு - பயிர்த் தொழில் செய்து சாப்பிட்டு
வாழ்வு - வாழ்தலே ஆகும்.
அதற்கு - பயிர்த் தொழிலுக்கு
ஒப்பு இல்லை-சமமான தொழில் வேறு இல்லை
வேறு ஓர் பணிக்கு - மற்றத் தொழில்களுக்கு
பழுது உண்டு-குற்றம் உண்டு

(க - ரை.) மற்றத் தொழில்களைவிட உழுது பயிர் செய்து வாழ்வதே சிறந்த தொழிலாகும்.

## மானமே உயிரைக்காட்டிலும் சிறந்தது

பிச்சைக்கு மூத்த குடிவாழ்க்கை பேசுங்கால்
இச்சைபல சொல்லி இடித்துண்கை ;—சிச்சீ !
வயிறு வளர்க்கைக்கு மானம் அழியாது
உயிர்விடுகை சால உறும். (5)

சொற்பொருள்

பேசுங்கால் - சொல்லப் போனால்
பிச்சைக்கு - பிச்சை எடுத்து உண்பதைவிட
மூத்த - இழிவில் பெரிய
குடி வாழ்க்கை - குடும்ப வாழ்க்கையானது
இச்சை பல சொல்லி - இச்சகச் சொற்கள் பலவற்றைப் பேசி
இடித்து உண்கை-(அவரால்) இடித்து உரைக்கப்பட்டு வாங்கி உண்பது ஆகும்
சிச்சீ - சீசீ
வயிறு வளர்க்கைக்கு - (இப்படி) வயிற்றை வளர்ப்பதை விட
மானம் அழியாது - மானம் கெடாமல்
உயிர் விடுகை-உயிர் விடுவது
சால உறும்-மிகவும் பொருத்தமானது

(க - ரை.) பிறரிடத்தில் இச்சகம்பேசி வாங்கியுண்டு, மானத்தை இழந்து உயிர் வாழ்வதைவிட, உயிரைவிட்டு மானத்தை நிலைநிறுத்துவதே மிகவும் உயர்ந்த செயல்.

## பாவிகளின் பணம் அவர்களுக்குப் பயன்படாது

பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்துவைத்துக்
கேடுகெட்ட மானிடரே கேளுங்கள் —கூடுவிட்டிங்கு
ஆவிதான் போயினபின்பு ஆரே அனுபவிப்பார்
பாவிகாள்! அந்தப் பணம்? (6)

சொற்பொருள்

பணத்தை - செல்வத்தை
பாடுபட்டுத் தேடி - வருந்தி உழைத்துச் சம்பாதித்து
புதைத்து வைத்து - (உண்ணுமலும் பிறர்க்குக் கொடாமலும்) நிலத்தில் புதைத்து வைத்து
கேடு கெட்ட - நன்மை இழந்த
மானிடரே கேளுங்கள் - மனிதர்களே கேட்பீர்களாக
கூடு விட்டு - உடம்பாகிய கூட்டினை விட்டு
ஆவிதான் போயின பின்பு - உயிர் நீங்கிவிட்டபின்
பாவிகாள் - பாவிகளே
அந்தப் பணம் - அந்தப் பணத்தை
இங்கு ஆர் அனுபவிப்பார் - இங்கு எவர் அநுபவிப்பார்
தான், ஏ - அசைகள்

(க - ரை.) பொருளை அரும்பாடு பட்டுச் சம்பாதித்துத் தான் வயிருர உண்ணுமலும் பிறர்க்குக் கொடுத்து அறம் செய்யாமலும் (நிலத்தில் புதைத்து) சேமித்து வைப்பதைவிட அறியாமை வேறு இல்லை.

## வரவுக்குத் தகுந்த செலவு செய்தல் வேண்டும்

ஆன முதலில் அதிகம் செலவானல்
மானம் அழிந்து மதிகெட்டுப்—போனதிசை
எல்லார்க்கும் கள்ளனய் ஏழ்பிறப்பும் தீயனய்
நல்லார்க்கும் பொல்லனும் நாடு. (7)

சொற்பொருள்

ஆன முதலில் - தனக்கு வரும் முதற் பொருளைவிட
அதிகம் செலவானல் - அதிகம் செலவு செய்தால்
மானம் அழிந்து - பெருமை கெட்டு
மதி கெட்டு - அறிவை இழந்து
போன திசை - சென்ற திசைகளில்
எல்லார்க்கும் கள்ளனய்-எல்லார்க்கும் திருடனுகி
ஏழ் பிறப்பும் - ஏழு வகையான பிறப்புகளிலும்
தீயன் ஆய் - கெட்டவனுகி
நல்லார்க்கும் பொல்லன் ஆம்- நல்லவர்க்கும் பொல்லாதவனுவான்
நாடு - இதை நீ அறிவாயாக.

(க - ரை) வரவுக்குமேல் செலவு செய்பவன் பழி பாவங்களையும் பலவிதத் துன்பங்களையும் அடைவான்.

## சுற்றத்தார் இயல்பு

மரம்பழுத்தால் வௌவாலை 'வா' என்று கூவி
இரந்தழைப்பார் யாவருமங்கு இல்லை—சுரந்தமுதம்
கற்றா தரல்போல் கரவாது அளிப்பரேல்
உற்றார் உலகத் தவர். (8)

சொற்பொருள்

மரம் பழுத்தால் - மரத்தில் பழம் பழுத்திருந்தால்
வௌவாலை - வௌவாலை
வா என்று - இங்கே (பழம் தின்ன) வா என்று
கூவி - கூப்பிட்டு
இரந்து அழைப்பார் - வேண்டி அழைப்பவர்
அங்கு - அம் மரத்தடியில்
யாவரும் இல்லை - ஒருவரும் இல்லை
கற்றா (கன்று + ஆ) - கன்றை ஈன்ற பசு
அமுதம் சுரந்து - பாலைச் சுரந்து
தரல்போல்-கொடுப்பது போல்
கரவாது - ஒளிக்காமல்
அளிப்பரேல் - கொடுத்தால்
உலகத்தவர் - உலக மக்கள்
உற்றார் - அவருக்கு உறவினர் ஆவார்கள்

(க - ரை.) உதவி செய்பவருக்கு எல்லாரும் தாமே உறவினராவர்.

## இன்சொல் வெல்லும்

வெட்டெனவை மெத்தெனவை வெல்லாவாம்; வேழத்தின்
பட்டுருவும் கோல்பஞ்சிற் பாயாது—நெட்டிருப்புப்
பாரைக்கு நெக்குவிடாப் பாறை பசுமரத்தின்
வேருக்கு நெக்கு விடும். (9)

சொற்பொருள்

வேழத்தின்-யானையின் உடலில்
பட்டு உருவும் - பாய்ந்து உருவிச் செல்கின்ற
கோல் - அம்பானது
பஞ்சில் பாயாது - மெல்லிய பஞ்சில் பாயாது
நெடு இருப்புப் பாரைக்கு நெக்குவிடா - நீண்ட இரும்பால் ஆன கடப்பாரைக்குப் பிளவுபடாத
பாறை - கருங்கல் பாறை
பசுமரத்தின் வேருக்கு - இள மரத்தின் வேருக்கு
நெக்கு விடும் - பிளவு படும் (அதுபோல)
வெட்டெனவை - கடுமையான சொற்கள்
மெத்தெனவை - மென்மையான சொற்களை
வெல்லாவாம் - வெல்லமாட்டா.

(க - ரை.) இனிய சொற்களால் வலியவர்களையும் வென்றுவிடலாம்.

## வினா-விடை

**1. நல்வழி என்னும் பெயர் வரக் காரணம் என்ன?**

இந்த நூல் நல்ல ஒழுக்க வழிகளைக் கூறும் பாடல்கள் அடங்கியது. ஆகையால், இதற்கு நல்வழி என்னும் பெயர் அமைந்தது. இதனை எழுதியவர் ஔவையார்.

**2. ஔவையார் யார்? அவர் எழுதிய நூல்கள் எவை?**

ஔவையார் அறிவு நிறைந்த அம்மையார்; பெரும் புலவர். அவர் எழுதிய நூல்கள் நல்வழி, ஆத்திசூடி, கொன்றைவேந்தன், வாக்குண்டாம் முதலியவை.

**3. சாதிகள் எத்தனை? அவை எவை?**

சாதிகள் இரண்டே ஆகும். இல்லாதவர்களுக்குக் கொடுத்து உதவி செய்பவர் உயர்ந்த சாதி. அப்படிக் கொடாதவர் தாழ்ந்த சாதி.

**4. இல்லையென்னுது கொடுப்பவர் யார்?**

நல்ல குடியில் பிறந்த பெரியவர்கள் வறுமை அடைந்தாலும், தம்மிடம் வந்து கேட்பவர்களுக்கு, இல்லை என்று கூறுமல் தம்மால் முடிந்த அளவு உதவி செய்வார்கள்.

**5. பசித்துன்பம் எப்படி விளக்கப்படுகிறது?**

கிடையாதபோது ஒரு நாளைக்கு உணவை விட்டுவிடு என்ருல் வயிறு விட்டிருக்காது. கிடைத்தபோது இரண்டு நாளைக்குச் சேர்த்து ஏற்றுக்கொள் என்ருல் ஏற்றுக் கொள்ளாது. வயிற்றுக்குச் சோறுதேடி அதனைத் திருப்தி செய்வதைவிட அரிய செயல் வேறு ஒன்றும் இல்லை. இவ்வாறு பசித்துன்பம் விளக்கப்படுகிறது.

**6. உழவின் உயர்வு யாது?**

பயிர்த்தொழில் செய்து உண்டு வாழ்வதே உயர்ந்த வாழ்க்கையாகும். மற்றத் தொழில்களுக்குப் பழுது உண்டு. ஆகையால், பயிர்த் தொழிலுக்குச் சமமான தொழில் வேறு ஒன்றும் இல்லை.

**7. மானமே உயிரைவிடச் சிறந்தது என்பது எப்படி விளக்கப்படுகிறது?**

பிறரிடத்தில் இச்சகம் பேசி வாங்கியுண்டு மானத்தை இழந்து உயிர் வாழ்வதைவிட, உயிரை விட்டு மானத்தை நிலைநிறுத்துவதே மிகவும் உயர்ந்த செயலாகும்.

**8. பாவிகளின் பணம் அவர்களுக்குப் பயன்படாதென்பதை விளக்கு.**

பொருளை அரும்பாடு பட்டுச் சம்பாதித்துத் தான்

வயிறார உண்ணாமலும், பிறர்க்குக் கொடுத்து அறம் செய்யாமலும் (நிலத்தில் புதைத்து) சேமித்து வைப்பதை விட அறியாமை வேறு இல்லை. பாவிகளின் பணம் அவர்களுக்குப் பயன்படாது.

9. வரவுக்குமேல் செலவு செய்பவன் கதி யாது ?

வரவுக்குமேல் செலவு செய்பவனுடைய பெருமை கெடும்; அறிவு அழியும்; செல்லும் திசைகளில் எல்லாருக்கும் திருடன் ஆவான். ஏழுவகைப் பிறவியிலும் கெட்டவன் ஆவான். தன்னிடம் அன்பு உடையவர்களுக்கும் பொல்லாதவன் ஆவான்.

10. சுற்றத்தார் இயல்பு யாது ?

தம்மிடம் உள்ள பொருளை மறைக்காமல் பிறருக்குக் கொடுப்பவருக்கு உலக மக்களே உறவினர் ஆகிவிடுவர்.

11. இன்சொல்லே வெல்லும் என்பதை விளக்கு.

யானையின் உடலில் பாய்ந்து உருவிச் செல்லும் அம்பு பஞ்சில் பாய்ந்து செல்லாது. நீண்ட கடப்பாரைக்குப் பிளவுபடாத கருங்கல் பாறை பசுமரத்தின் வேருக்குப் பிளவுபடும். அதுபோலக் கடுமையான சொற்கள் இனிய சொற்களை வெல்லமாட்டா.

## 2. நீதி வெண்பா

இது நீதியைக் கூறும் 100 வெண்பாப் பாடல்கள் அடங்கிய நூல். எனவே, இதற்கு நீதி வெண்பா எனப் பெயர் வந்தது. இதனை எழுதியவர் எவர் எனத் தெரியவில்லை.

### நல்லவர்கள் எங்கே பிறந்தாலும் மதிக்கப்படுவார்கள்

தாமரைபொன் முத்துச் சவரம்கோ ரோசனைபால்
பூமருதேன் பட்டுப் புனுகுசவ்வாது—ஆம்அழல்மற்று
எங்கே பிறந்தாலும் எள்ளாரே ; நல்லோர்கள்
எங்கே பிறந்தாலும் என் ? (1)

சொற்பொருள்

தாமரை பொன்முத்து - தாமரைப்பூவும் பொன்னும் முத்தும்

சவரம் கோரோசனை - கவரிமான் மயிரும் கோரோசனையும்

பால் - பாலும்

பூமரு தேன் - பூவில் பொருந்திய தேனும்
பட்டு புனுகு சவ்வாது-பட்டும் புனுகும் சவ்வாதும்
ஆம்அழல் - எரியும் நெருப்பும்
எங்கே பிறந்தாலும் - எவ்வளவு தாழ்ந்த இடத்திலிருந்து கிடைத்தாலும்
எள்ளார் - உலக மக்கள் இகழமாட்டார்கள்
நல்லோர்கள் எங்கே பிறந்தாலும் என் - நல்லவர்கள் எந்தக் குலத்தில் பிறந்தாலும் என்ன குறை (ஒன்றும் இல்லை)

(கருத்துரை) நல்லவர்கள் எந்தக் குலத்தில் பிறந்தாலும் உயர்வாகவே மதிக்கப்படுவார்கள்.

## நஞ்சு உள்ள இடங்கள்

ஈக்கு விடம்தலையில் எய்தும் ; இருந் தேளுக்கு
வாய்த்த விடம்கொடுக்கில் வாழுமே—நோக்கரிய
பைங்கண் அர வுக்குவிடம் பல்லளவே ; துர்ச்சனருக்கு
அங்கமுழு தும்விடமே ஆம். (2)

சொற்பொருள்

ஈக்கு விடம் - ஈ என்னும் பூச்சிக்கு நஞ்சு
தலையில் எய்தும் - தலையில் இருக்கும்
இரும் தேளுக்கு - பெரிய தேளுக்கு
வாய்த்த விடம் - பொருந்திய நஞ்சு
கொடுக்கில் வாழும் - கொடுக்கில் இருக்கும்
நோக்க அரிய - பார்க்கப் பயங்கரமான
பைங்கண் - பசுமையான கண்களை உடைய
அரவுக்கு விடம் - பாம்புக்கு நஞ்சு
பல்அளவே - பல்லில் மட்டுமே இருக்கும்
துர்ச்சனருக்கு - தீய குணம் உடைய கொடியவர்களுக்கு
அங்கம் முழுதும் - உடம்பு முழுவதும்
விடமே ஆம் - நஞ்சாகவே இருக்கும்

(க - ரை.) ஈக்குத் தலையிலும், தேளுக்குக் கொடுக்கிலும், பாம்புக்குப் பல்லிலும் ஆக, ஒவ்வோர் உறுப்பில் மட்டும்தான் நஞ்சு இருக்கும். ஆனால், கொடியவர்களுக்கோ உடம்பு முழுவதும் நஞ்சாகவே இருக்கும்.

## அற்பரும் அறிஞரும்

சிற்றுணர்வோர் என்றும் சிலுசிலுப்பர் ; ஆன்றுஅமைந்த
முற்றுணர்வோர் ஒன்றும் மொழியாரே—வெற்றிபெறும்
வெண்கலத்தின் ஓசை மிகுமே ; விரிபசும்பொன்
ஒண்கலத்தில் உண்டோ ஒலி ? (3)

சொற்பொருள்

வெற்றிபெறும் வெண் கலத்தின் ஓசை - சிறந்த வெண் கலத்திலிருந்து உண்டாகும் ஓசை
மிகும் - மிகுதியாக இருக்கும்
விரிபசும்பொன் - ஒளி வீசும் தங்கத்தால் ஆகிய
ஒண் கலத்தில் ஒலி உண்டோ- ஒளி மிகுந்த பாண்டத்தில் ஓசை உண்டாகுமோ (உண்டாகாது)
சிற்றுணர்வோர் - குறைந்த அறிவு உடையவர்
என்றும் சிலுசிலுப்பர்-எப்போதும் படபடத்துப் பேசுவர்
ஆன்று அமைந்த - அறிவில் சிறந்து அடக்கமான
முற்றுணர்வோர் - முதிர்ந்த அறிவு உடையவர்
ஒன்றும் - ஒரு வார்த்தையும் அதிகமாக
மொழியார் - பேசமாட்டார்

(க-ரை.) வெண்கலத்தில் ஓசை மிகுதியாக இருக்கும். தங்கத்தில் ஓசை உண்டாகாது. அதுபோலக் குறைந்த அறிவுடையவர்கள் எப்போதும் படபடப்பாகப் பேசுவார்கள். முதிர்ந்த அறிவு உடையவர்கள் அவ்வாறு ஒன்றும் பேசமாட்டார்கள்.

## தீயவர் கண்ணில் படாமல் நீங்குவதே நல்லது

கொம்புளதற்கு ஐந்து குதிரைக்குப் பத்துமுழம்
வெம்புகரிக்கு ஆயிரந்தான் வேண்டுமே—வம்புசெறி
தீங்கினர் தம் கண்ணில் தெரியாத தூரத்து
நீங்குவதே நல்ல நெறி. (4)

சொற்பொருள்

கொம்பு உளதற்கு - தலையில் கொம்பை உடைய விலங்குகளுக்கு
ஐந்து - ஐந்து முழத் தூரமும்
குதிரைக்கு - குதிரைக்கு
பத்து முழம் - பத்து முழத் தூரமும்
வெம்புகரிக்கு - மதங்கொண்ட கோபம் மிக்க யானைக்கு
ஆயிரம் - ஆயிரமுழத் தூரமும்
வேண்டும் - விலகிப் போக வேண்டும்
வம்புசெறி-வஞ்சனை நிறைந்த
தீங்கினர் தம் - கொடியவர்களுடைய
கண்ணில் - கண் பார்வையில்
தெரியாத தூரத்து - தெரியாத தூரத்தில்
நீங்குவதே - ஒதுங்கிவிடுவதே
நல்ல நெறி - நல்ல வழி ஆகும்

(க-ரை) விலங்குகளிடமிருந்து சற்றுத் தொலைவு விலகி இருந்துவிட்டால் நம்மைக் காத்துக் கொள்ளலாம். ஆனால், தீயவர்களிடமிருந்து நம்மைக் காத்துக்கொள்ள வேண்டுமானால், அவர்களுடைய கண் பார்வையில் படாமல் ஒதுங்கி இருத்தல் வேண்டும்.

## நல்ல தாய்மார் ஐவர்

தன்னை அளித்தாள் தமையன்மனை குருவின்
பன்னி அரசன் பயில்தேவி—தன்மனையைப்
பெற்றாள் இவர்ஐவர் பேசில் எவருக்கும்
நற்றாயர் என்றே நவில். (5)

சொற்பொருள்

| | |
|---|---|
| தன்னை அளித்தாள்-தன்னைப் பெற்றவள் | தன் மனையைப் பெற்றாள் - தன் மனையைப் பெற்றவள் |
| தமையன் மனை - அண்ணனுடைய மனைவி | இவர் ஐவர் - இந்த ஐவரும் |
| குருவின் பன்னி - ஆசிரியர் மனைவி | பேசில் - சொல்லப்போனால் |
| அரசன் பயில்தேவி-அரசன் மனைவியாகிய பட்டத்தரசி | எவருக்கும் - எப்படிப்பட்டவருக்கும் |
| | நற்றாயர் - நல்ல தாய்மார் |
| | என்றே நவில் - என்று சொல் |

(க-ரை.) தன்னைப் பெற்றவள், அண்ணன் மனைவி, ஆசிரியர் மனைவி, அரசன் மனைவியாகிய அரசி, தன் மனைவியைப் பெற்றவள் ஆகிய இந்த ஐவரும் எவருக்கும் நல்ல தாய்மார்களே ஆவார்கள்.

### வினா-விடை

**1.** நீதிவெண்பா—பெயர்க் காரணம் என்ன?

இது நீதியைக் கூறும் வெண்பாக்களால் ஆகிய நூல் ஆதலின் நீதி வெண்பா என்னும் பெயர் பெற்றது.

**2.** நல்லவர்கள் எங்கே பிறந்தாலும் சிறப்பாக மதிக்கப் படுவர் என்பதை விளக்கு.

தாமரை, பொன், முத்து, சவரம், கோரோசனை, பால், தேன், பட்டு, புனுகு, சவ்வாது, நெருப்பு ஆகியவை எங்கே தோன்றினாலும் உலக மக்கள் அவற்றைச் சிறப்பாக மதிப்பார்கள். அதுபோல நல்லவர்கள் தாழ்ந்த குலத்தில் பிறந்தாலும் சிறப்பாகவே மதிக்கப் படுவார்கள்.

**3.** நஞ்சுள்ள இடங்கள் எவை?

ஈக்குத் தலையிலும், தேளுக்குக் கொடுக்கிலும், பாம்புக்குப் பல்லிலும் ஆக ஒவ்வோர் உறுப்பில் மட்டுமே நஞ்சு இருக்கிறது. ஆனால், துர்ச்சனராகிய கொடியவருக்கோ உடம்பு முழுவதும் நஞ்சாகவே இருக்கும்.

**4.** அற்பரும் அறிஞரும் யாவர்?

வெண்கலத்தில் ஓசை மிகுதியாக இருக்கும். ஆனால், தங்கத்தில் ஒலி உண்டாகாது. அதுபோல், குறைந்த

அறிவுடையோர் எப்போதும் சிடுசிடுத்துப் பேசுவர். முதிர்ந்த அறிவுடையோர் அப்படிப் பேசாமல் அமைதியாக இருப்பர்.

**5. எவர் கண்ணில் படாமல் நீங்குவதே நல்லது?**

விலங்குகளிடமிருந்து சற்றுத் தொலைவு விலகி இருந்து விட்டால் நம்மைக் காத்துக் கொள்ளலாம். ஆனால், வஞ்சனை நிறைந்த கொடியவர்களுடைய கண் பார்வைக்குத் தெரியாத தூரத்தில் விலகிப் போய்விட வேண்டும் என்பதே நல்ல நெறியாகும்.

**6. நல்ல தாய்மார் ஐவர் எவர்?**

தன்னைப் பெற்றவள், அண்ணன் மனைவி, ஆசிரியர் மனைவி, அரசி, தன் மனைவியைப் பெற்றவள் ஆகிய இந்த ஐவரும் நல்ல தாய்மாரே ஆவர்.

## 3. நன்னெறி

நன்னெறி என்பது மக்களுக்கு நன்மைதரும் நீதி வழியைக் கற்பிக்கும் சிறந்த நூலாகும். இந்நூலில் அரிய நீதிகளை அழகிய உவமைகளுடன் கூறும் 40 வெண்பாக்கள் இருக்கின்றன. இதனை இயற்றியவர் துறைமங்கலம் சிவப்பிரகாச அடிகள் என்பவர். இவர் வீரசைவ மரபைச் சேர்ந்த துறவி; கி. பி. 17ஆம் நூற்றாண்டில் காஞ்சீபுரத்தில் பிறந்தவர். இவர் தந்தை—குமாரசாமி தேசிகர். இவர் பிரபுலிங்க லீலை, சீகாளத்திப் புராணம், நால்வர் நான்மணிமாலை முதலிய பல நூல்களை இயற்றியுள்ளார்.

### சினத்தை அடக்கவேண்டும்

உள்ளம் கவர்ந்தெழுந்து ஓங்கு சினம்காத்துக்
கொள்ளும் குணமே குணம்என்க—வெள்ளம்
தடுத்தல் அரிதோ தடங்கரைதான் பேர்த்து
விடுத்தல் அரிதோ விளம்பு. (1)

சொற்பொருள்

**வெள்ளம்** - பொங்கிவரும் வெள்ளத்தை
**தடுத்தல் அரிதோ**-கரைகட்டித் தடுப்பது அருமையானதோ
**தடம்கரை பேர்த்து** - பெரிய கரையை உடைத்து
**விடுதல் அரிதோ** - (கரைக்குள் அடங்கியிருந்தவெள்ளத்தை வெளியே) ஓடும்படி விடுவது அரியதோ
**விளம்பு** - நீ கூறுவாயாக (அது போல்)

உள்ளம் - மனத்தை
கவர்ந்து எழுந்து - தன் வசப் படுத்தி வெளிப்பட்டு
ஓங்கு சினம் - பொங்கி எழும் கோபத்தை
காத்துக் கொள்ளும் - அடக்கிக் கொள்கின்ற
குணமே குணம் என்க - நல்ல குணமே குணம் என்று அறியக் கடவாய்
தான் - அசை

(க-ரை.) கரையை உடைத்து வெள்ளத்தை வெளியே பாயச் செய்வது எளிது. பொங்கிவரும் வெள்ளத்தை அணையிட்டுத் தடுப்பது அரிது. அதுபோல, கோபங் கொள்ளுதல் எளிது. அதனை அடக்குதல் அரிது. எனவே, கோபத்தை அடக்கிக் காத்தலே மேன்மையான குணம்.

## தம் நலம் கருதாதவர் சிறந்தவர்

தங்குறைதீர்வு உள்ளார் தளர்ந்து பிறர்க்குஉறூஉம்
வெங்குறைதீர்க் கிற்பார் விழுமியோர்—திங்கள்
கறையிருளை நீக்கக் கருதாது உலகில்
நிறையிருளை நீக்கும்மேல் நின்று. (2)

சொற்பொருள்

திங்கள் - சந்திரன்
கறை இருளை - தன்னிடம் உள்ள களங்கமாகிய இருளை
நீக்கக் கருதாது - போக்கு வதற்கு நினைக்காமல்
மேல் நின்று - வானத்திலே நின்று
உலகில் நிறை இருளை - உலகத்தில் நிறைந்த இருளை
நீக்கும்-விலக்கும் (அதுபோல)
விழுமியோர்-மேன்மைக் குண முடைய பெரியோர்
தம் குறைதீர்வு உள்ளார் - தம் குறைகளைப் போக்கிக் கொள்ள எண்ணுமல்
தளர்ந்து - மனம் இளகி
பிறர்க்கு உறூஉம் - மற்றவர் களுக்கு உண்டாகின்ற
வெம்குறை - கடுமையான குறைகளை
தீர்க்கிற்பார் - நீக்குவார்

(க-ரை.) சந்திரன் தன்னிடமுள்ள இருளை நீக்கிக் கொள்ள எண்ணுமல் வானில் நின்று உலகத்தின் இருளைப் போக்குகின்றது. அதுபோல, உயர்ந்த குணமுடைய பெரியோர் தங்கள் குறைகளைப் போக்கிக் கொள்ள நினையாமல், மற்றவர்களுக்கு ஏர்படும் கொடிய துன்பங்களை நீக்குவர். பெரியோர் தந்நலம் கருதாமல் பிறர் நலம் கருதி உழைப்பர்.

## நல்லோர் வரவும் தீயோர் வரவும்

நல்லோர் வரவால் நகைமுகங்கொண்டு இன்புஉறீஇ
அல்லோர் வரவால் அழுங்குவார்—வல்லோர் ;
திருந்தும் தளிர்காட்டித் தென்றல்வரத் தேமா
வருந்தும் சுழல்கால் வர. (3)

சொற்பொருள்

தேமா - இனிய கனியை உடைய மாமரம்
தென்றல்வர - தென்றல் காற்று வீச
தளிர் காட்டித் திருந்தும் - தளிர்விட்டு அழகு பெற்றிருக்கும்
சுழல்கால் வர வருந்தும்-சுழல் காற்று வீசும்போது(இலைகள் உதிர்ந்து அழகு கெட்டு) வருந்தும் (அதுபோல)
வல்லோர் - கல்வி அறிவு மிகுந்தவர்
நல்லோர் வரவால் - நல்லவர்களாகிய பெரியோர் வருகையால்
நகைமுகம் கொண்டு - புன்முறுவல் கூடிய மலர்ந்த முகத்தோடு
இன்பு உறீஇ-இன்பமடைந்து
அல்லோர் வரவால் - தீயவர்களின் வருகையால்
அழுங்குவார் - துன்பம் அடைவார்

(கு - ரை.) மாமரம் தென்றல் வீசினல் தளிர்விட்டு அழகுடன் நிற்கும்; சுழல்காற்று வீசினல் இலைகள் உதிர்ந்து அழகு கெட்டு வருந்தும். அதுபோல, அறிவுடையோர் நல்லவர்கள் வருகையால் முகமலர்ச்சி கொண்டு இன்பம் அடைவர்; தீயவர்களின் வருகையால் மனம் வருந்தித் துன்பம் அடைவர்.

## அற்பர்களின் குணம்

உண்டு குணம்இங்கு ஒருவர்க்கு எனினும்கீழ்
கொண்டு புகல்வதுஅவர் குற்றமே—வண்டுமலர்ச்
சேக்கை விரும்பும் செழும்பொழில்வாய் வேம்பன்றே
காக்கை விரும்பும் கனி. (4)

சொற்பொருள்

செழும் பொழில்வாய்-செழிப்பு மிக்க சோலையில்
வண்டு - வண்டுகள்
மலர்ச்சேக்கை விரும்பும் - மலர்ப்படுக்கையை விரும்பும்
காக்கை விரும்பும் கனி - காக்கை விரும்புகின்ற பழம்
வேம்பு அன்றே - வேப்ப மரத்தின் பழம் அல்லவா? (அது போல)
இங்கு ஒருவர்க்கு - இந்த உலகத்தில் ஒருவருக்கு
குணம் உண்டு எனினும் - நல்ல குணங்கள் இருக்கின்றன என்றாலும்
கீழ் கொண்டு புகல்வது - அறிவில்லாத கீழோர் (பெரிதாக) எடுத்துக் கூறுவது
அவர் குற்றமே - அவருடைய குற்றங்களையே ஆகும்

(க - ரை.) சோலையில் வண்டு மலர்ப்படுக்கையை விரும்பும். ஆனால், காகம் வேப்பங்கனியைத்தான் விரும்பும். அதுபோல, இந்த உலகில் ஒருவர் நல்ல குணம் உடையவர் என்றாலும் அறிவற்ற கீழ்மக்கள் அவருடைய குறைகளையே பெரிதாக எடுத்துக் கூறிக் கொண்டிருப்பார்கள். நல்லவர்களோ பிறரிடம் உள்ள உயர்குணத்தையே எடுத்துக் கூறுவர்.

## பயன் கருதாத உதவி

கைம்மாறு உகவாமல் கற்றுஅறிந்தோர் மெய்வருந்தித்
தம்மால் இயல்உதவி தாம்செய்வர் —அம்மா!
முளைக்கும் எயிறு முதிர்சுவைநா விற்கு
விளைக்கும் வலியனதாம் மென்று. (5)

### சொற்பொருள்

முளைக்கும் எயிறு - முளைக்கின்ற பற்கள்
நாவிற்கு - தமக்கு எந்த வகையான உதவியும் செய்யாத நாக்குக்கு
வலியன - கடினமான உண்பொருள்களை
தாம் மென்று - தாமே மென்று கொடுத்து
முதிர் சுவை விளைக்கும் - நிறைந்த சுவையை உண்டாக்கும் (அதுபோல)
கற்று அறிந்தோர் - கற்று அறிந்த பெரியோர்
கைம்மாறு உகவாமல் - பதில் உதவியை விரும்பாமல்
மெய்வருந்தி - உடலை வருத்தியும்
தம்மால் இயல் உதவி - தம்மால் முடிந்த உதவியை
தாம் செய்வர் - தாமே (பிறருக்குச்) செய்வர்
அம்மா - வியப்பை உணர்த்தும் இடைச்சொல்

(க - ரை.) நாவினால் தமக்கு எவ்வித உதவியும் இல்லாமலிருந்தும் பற்கள் கடினமான உண்பொருள்களைத் தாமே மென்று கொடுத்து நாக்கிற்கு நிறைந்த சுவையை உண்டாக்கும். அதுபோலக் கற்றறிந்த பெரியோர், பதில் உதவியை எதிர்பாராமலே பிறருக்குத் தம்மால் முடிந்த உதவிகளைச் செய்வர்.

### வினா-விடை

**1. நன்னெறி என்னும் பெயர் வரக் காரணம் என்ன?**

இந்த நூல் மக்களுக்கு நன்மைதரும் நீதி வழியைக் கற்பிக்கும் சிறந்த நீதி நூலாதலின் இப்பெயர் பெற்றது. நன்னெறி—நன்மைநெறி; (நன்மை = நன்மை தரும்; நெறி=நீதி வழி). இந் நூலில் அரிய நீதிகளை அழகிய உவமைகளுடன் கூறும் 40 வெண்பாக்கள் இருக்கின்றன. இதனை எழுதியவர் துறைமங்கலம் சிவப்பிரகாச அடிகள்.

**2. சிவப்பிரகாச அடிகள் யார்? அவர் எழுதிய நூல்கள் எவை?**

சிவப்பிரகாச அடிகள் வீர சைவத்துறவி; காஞ்சீ புரத்தில் பிறந்தவர். இவர் தந்தை குமாரசாமி தேசிகர். இவர் பிரபுலிங்கலீலை, சீகாளத்திப் புராணம், நால்வர் நான்மணிமாலை, சோணசைலமாலை முதலிய பல நூல்களை இயற்றியுள்ளார்.

**3. சினத்தை எப்படி அடக்க வேண்டும்?**

கரையை உடைத்து வெள்ளத்தை வெளியே பாயச் செய்வது எளிது. அதனை அணையிட்டுத் தடுப்பது அரிது. அதுபோல் கோபங்கொள்ளுதல் எளிது. அதனை அடக்குதல் அரிது. எனவே, கோபத்தை அடக்கிக் காத்தலே மேன்மையான குணமாகும்.

**4. தம் நலம் கருதாத சிறந்தவர் எவர்?**

சந்திரன் தன்னிடமுள்ள இருளை நீக்கிக்கொள்ள எண்ணுமல் உலகின் இருளைப் போக்குகின்றது. அது போல உயர்ந்த குணமுடைய பெரியோர் தங்கள் குறை களைப் போக்கிக்கொள்ள நினையாமல் மற்றவர்களுக்கு ஏற்படும் கொடிய துன்பங்களை நீக்குவர். பெரியோர் தந்நலம் கருதாமல் பிறர் நலம் கருதி உழைக்கும் சிறந்தவர் ஆவர்.

**5. நல்லோர் வரவும் தீயோர் வரவும் எவ்வாறு கூறப் பட்டுள்ளன?**

தென்றல் காற்று வீசினுல் மாமரம் தளிர்விட்டு அழகுடன் நிற்கும். சுழல் காற்று வீசினுல் இலைகள் உதிர்ந்து அழகு கெட்டு வருந்தும். அதுபோல், அறிவுடையவர்கள் நல்லோர் வருகையால் முகமலர்ச்சி கொண்டு இன்பம் அடைவர். தீயோர் வருகையால் மனம் வருந்தித் துன்பம் அடைவர்.

**6. அற்பர்களின் குணம் எத்தகையது?**

வண்டு சோலையில் மலர்ப்படுக்கையை விரும்பும். ஆனுல், காகமோ வேப்பங்கனியைத்தான் விரும்பும். அதுபோல, இந்த உலகில் ஒருவர் நல்ல குணம் உடையவர் என்றாலும், அறிவற்ற கீழ்மக்கள் அவருடைய குறை களையே பெரிதாக எடுத்துக் கூறிக்கொண்டிருப்பார்கள். நல்லவர்களோ பிறரிடம் உள்ள குணத்தையே எடுத்துக் கூறுவார்கள்.

**7. பயன் கருதாத உதவியைச் செய்பவர் எவர்?**

நாவினால் தமக்கு எவ்வித உதவியும் இல்லாமலிருந்தும் பற்கள் கடினமான உண்பொருள்களைத் தாமே மென்று கொடுத்து நாக்கிற்கு நிறைந்த சுவையை உண்டாக்கும். அதுபோலக் கற்றறிந்த பெரியோர் பதில் உதவியை எதிர்பாராமலே பிறருக்குத் தம்மால் முடிந்த உதவிகளைச் செய்வர்.

## 4. திருவேங்கட சதகம்

இச் செய்யுள், **மணவாள நாராயண சதகம்** என்றும் திருவேங்கட சதகம் என்றும் கூறப்படும் நூலில் உள்ளது. இது மணவாள நாராயணன் என்னும் செல்வரை முன்னிட்டுப் பாடப்பட்ட 100 செய்யுள்கள் அடங்கியது. இந் நூலை எழுதியவர் **திவ்விய கவி நாராயண பாரதியார்.** இவர் தொண்டை நாட்டில் வெண்மணி என்னும் ஊரில் 18ஆம் நூற்றுண்டின் முற்பகுதியில் பிறந்தவர். இவர் தந்தை பெயர் முத்தார ஐயர்.

தெள்ளமுதம் அனையகல் விப்பொருள் படைத்திடின்
தேசமெல் லாந்துதிக்கும்;
செயத்தம்பம் ஆனபுகழ் நிலைநிற்கும்; இவையெலாம்
செம்பொன்மிகு செல்வமதுபோல்
வெள்ளமது கொளுமெனும் பயமில்லை; கனலினால்
வெம்பவரு சலனமில்லை;
வேந்தர்கள் பறித்திடக் கூடாது; சோதரர்
விரும்பினும் பங்குறாது;
கள்ளரால் திருடவும் முடியாது; வரவரக்
கனமலால் குறைவுறாது;
கருணைஞா னந்தழையும்; ஆகையால், உனையிதய
கமலத்தில் வைப்பதெளிதாம்;
வள்ளலென வருகின்ற மாடபூ சியரதிபன்
மணவாள நாராயணன்
மனத்திலுறை அலர்மேலு மங்கைமண வாளனே!
வரதவேங் கடராயனே!

சொற்பொருள்

**தெள்ளமுதம் அனைய** - தெளிந்த அமுதம் போன்ற
**கல்விப் பொருள்** - கல்விச் செல்வம்
**படைத்திடின்**-பெற்றுக்கொண்டால்
**தேசமெலாம்** - நாட்டுமக்களெலாம்

துதிக்கும் - போற்றுவார்கள்
செயத்தம்பம் ஆன புகழ் - வெற்றித்தூண் நாட்டத்தக்க புகழ்
நிலைநிற்கும்-நிலைத்து நிற்கும்
இவையெல்லாம்-இந்தப் புகழ் எல்லாம்
செம்பொன் மிகு - சிறந்த பொன் நிறைந்த
செல்வமதுபோல் - செல்வத்தைப்போல
வெள்ளமது-வெள்ள நீரானது
கொளும் எனும் - அடித்துக் கொண்டு போய்விடும் என்னும்
பயமில்லை-அச்சம் இல்லை
கனலினால் - நெருப்பினால்
வெம்ப வரு - கருகிவிடும் என்னும்
சலனம் இல்லை - மனக்கவலை இல்லை
வேந்தர்கள் - மாமன்னர்கள்
பற்றிடக்கூடாது - கைப்பற்றிக்கொள்ள முடியாது
சோதரர் - உடன்பிறந்தவர்
விரும்பினும் - விரும்பினாலும்
பங்குஉறுது - பாகம் அடையாது
கள்ளரால் திருடவும் முடியாது - திருடர்களால் திருட முடியாது
வரவரக் கனமலால் - வரவர மிகுதியாகுமே அல்லாமல்
குறைவு உறுது - குறைவு அடையாது
கருணை ஞானம் - கருணையும் ஞான அறிவும்
தழையும் - பெருகும்
ஆகையால்—
உனை - கல்வியாகிய உன்னை
இதய கமலத்தில் - மனமாகிய தாமரையில்
வைப்பது எளிதாம்-வைத்துக்கொண்டிருப்பது எளிதேயாகும்
வள்ளல் என வருகின்ற - வள்ளல் என்று போற்றப்படுகின்ற
மாடபூசியர் - (ஒரு குழுவினரின் பட்டப்பெயர்) மாடபூசியர்களின்
அதிபன் - தலைவனாகிய
மணவாள நாராயணன்-மணவாள நாராயணன் எனும் செல்வனின்
மனத்தில் உறை - மனத்தில் வசிக்கின்ற
அலர்மேல் மங்கை - தாமரைப் பூவின்மேல் நின்றுள்ள மங்கையாகிய இலக்குமியின்
மணவாளனே - கணவனாகிய நாராயணனே !
வரதவேங்கடராயனே-வேண்டுபவர் அனைவருக்கும் வரமளிக்கும் திருவேங்கடத்தில் உறைகின்ற தலைவனே

## வினா-விடை

**கல்வியின் சிறப்பை நாராயண பாரதி எங்ஙனம் கூறியுள்ளார் ?**

ஒருவன், தெளிந்த அமுதம் போன்ற கல்விச் செல்வத்தைப் பெற்றுக் கொண்டுவிட்டால், நாட்டு மக்களெல்லாம் அவனைப் போற்றுவார்கள். வெற்றித் தூணை நிலைநாட்டத்தக்க புகழ் நிலைத்து நிற்கும். இப்படிப்பட்ட புகழ், சிறந்த பொன்நிறைந்த செல்வத்தைப்போல், வெள்ளத்தில் போய்விடுமோ என்னும் அச்சம் இல்லை. நெருப்

பிறைல் கருகிவிடுமோ என்னும் மனக் கவலையுமில்லை. மாமன்னர்கள் கைப்பற்றிக்கொள்ளவும் முடியாது. உடன் பிறந்தவர்கள் விரும்பினாலும் பங்குபோட முடியாது. திருடர்களால் திருடவும் முடியாது. நாளுக்கு நாள் இது மிகுந்துகொண்டே போகுமே ஒழியக் குறைவு அடையாது. கருணையும் ஞானமும் பெருகும். கல்வியை மனமாகிய தாமரையில் காத்து வைத்துக்கொண்டிருப்பதும் எளிதாகும் என்று நாராயண பாரதி கல்வியின் சிறப்பை விளக்கியுள்ளார்.

# II. இயற்கை அழகு

## (அ) பாஞ்சாலங்குறிச்சி வளம்

இது 'கட்டபொம்மன் சிந்து' என்னும் பாடல் நூலில் உள்ள மூன்று பாட்டுகள் ஆகும்.

வாழை பலாவும் பழஞ்சொரியும் ;—நல்ல
மாவும் கமுகும் வளம்பெருக்கும் ;
தாழை மலர்களும் பூச்சொரியும் ;—நதித்
தாமரை பூத்திடும் பேன்மைகளும். (1)
சோலையில் மாங்குயில் கூவிடுமாம் ;—வளம்
சொல்லி மயில்விளை யாடிடுமாம் ;
வாலையெ னும்சக்க தேவி—கிருபையால்
பாலும் பசுவும் வளர்ந்திடுமாம். (2)
முசலும்நாய் தன்னைக் கடித்திடுமாம்—வெகு
முனையுள்ள பாஞ்சால நாட்டினிலே
பசுவும் புலியும் ஒருதுறையில்—ஒரு
பக்கமாய் நின்றுதண் ணீர்அருந்தும்.

### சொற்பொருள்

வாழை பலாவும் - வாழை மரமும் பலா மரமும்
பழம் சொரியும் - பழங்களை உதிர்க்கும்
நல்ல மாவும் - நல்ல மாமரங்களும்
கமுகும் - பாக்கு மரங்களும்
வளம் பெருக்கும் - வளத்தைப் பெருக்கும்
தாழை மலர்களும் - தாழம் பூக்களும்
பூச்சொரியும் - இதழ்களை உதிர்க்கும்
நதித் தாமரை - ஆற்றில் தாமரை
பூத்திடும் மேன்மைகளும்- மலரும் சிறப்பும்
சோலையில் - மாஞ்சோலையில்

மாங்குயில்-சிறந்த குயில்கள்
கூவிடுமாம் - இசை எழுப்பும்
வளம் சொல்லி - நாட்டு வளத்தின் சிறப்புகளைக் கூறி
மயில் விளையாடிடுமாம்-மயில்கள் நடனம் ஆடும்
வாலை எனும் - இளமை பொருந்திய
சக்கதேவி - கட்டபொம்மனுக்குக் குலதெய்வமாகிய சக்கம்மா தேவி
கிருபையால் - கருணையால்
பாலும் பசுவும் - பாலும், அப்பாலைத்தரும் பசுக்களும்
வளர்ந்திடுமாம் - பெருகி விடுமாம்
முசலும் - முயலும்
நாய் தன்னை - நாயை
கடித்திடுமாம் - கடித்துத் துரத்துமாம்
வெகு முனையுள்ள - மிகுந்த பகைமையுள்ள
பாஞ்சால நாட்டினிலே - பாஞ்சாலங்குறிச்சி எனப்படும் நாட்டினிலே
பசுவும் புலியும்-பசுவும் அதன் பகையாகிய புலியும்
ஒரு துறையில் - ஒரே நீர்த்துறையில்
ஒரு பக்கமாய் நின்று - ஒரே பக்கத்தில் நின்று
தண்ணீர் அருந்தும் - தண்ணீர் பருகும்

**பாஞ்சாலங்குறிச்சியின் வளம் எவ்வாறு கூறப்பட்டுள்ளது?**

பாஞ்சாலங்குறிச்சியில் வாழை, மா, பலா, கமுகு முதலிய மரங்கள் பழங்களை உதிர்த்து வளத்தைப் பெருக்கும். தாழம்பூ தன் இதழ்களை உதிர்க்கும். நீர் நிலைகளில் தாமரை மலர்கள் பூத்து அழகினை உண்டு பண்ணும். மாஞ்சோலைகளில் குயில்கள் இசைபாட, மயில்கள் நடனமாடும். கட்டபொம்மனின் குலதெய்வமாகிய சக்கம்மாதேவியின் கருணையால், பாஞ்சாலங்குறிச்சியில் பால் வளமும் அப்பாலைத் தரும் பசு வளமும் பெருகி நிற்கும். முயலும் நாயைக் கடித்துத் துரத்தும் வீரம் அம்மண்ணுக்கு உண்டு. பாஞ்சாலங்குறிச்சி எனப்படும் நாட்டினிலே பசுவும் அதன் பகையாகிய புலியும் ஒரே நீர்த்துறையில் ஒரே பக்கத்தில் நின்று நீர் பருகும். ஆக, இத்தகைய வளங்கள் நிறைந்தது கட்டபொம்மனின் பாஞ்சாலங்குறிச்சி.

## (ஆ) மழைக் குறி

இச் செய்யுளைப் பாடியவர் என்னயினுப் புலவர் என்பவர். இவருடைய இயற்பெயர் வேலன் சின்னத்தம்பி என்பதாகும். இவர் முத்துப் புலவர் என்பவரிடம் கல்வி பயின்றுர். இவர் காலம் 17ஆம் நூற்ருண்டு ஆகும்.

உழவர் வாழ்க்கையை விளக்கிப் பாடும் சிறு நூல் பள்ளு எனப்படும். பள்ளர்—உழவர்; முக்கூடல் என்பது தாமிரபரணி ஆற்றங்கரையில் உள்ள ஊர். இது சீவலப் பேரி என வழங்கப்படுகிறது.

ஆற்றுவெள்ளம் நாளைவரத் தோற்றுதே குறி ;—மலை
யாளமின்னல் ஈழமின்னல் சூழ மின்னுதே ;
நேற்றும்இன்றும் கொம்புசுற்றிக் காற்றடிக்குதே ;—கேணி
நீர்ப்படு சொறித்தவளை கூப்பி டுகுதே ;
சேற்றுநண்டு சேற்றில்வளை ஏற்ற டைக்குதே ;—மழை
தேடியொரு கோடிவானம் பாடி ஆடுதே ;
போற்றுதிரு மாலழகர்க்கு ஏற்ற மாம்பண்ணைச்—சேரிப்
புள்ளிப்பள்ளர் ஆடிப்பாடித் துள்ளி கொள்வோமே !

சொற்பொருள்

ஆற்று வெள்ளம் நாளைவர -
குறி தோற்றுதே - அடையாளம் தோன்றுகிறது
மலையாளம் மின்னல் - மேற்குப் புறமிருந்து தோன்றும் மின்னலும்
ஈழம் மின்னல் - யாழ்ப்பாணம் உள்ள தெற்குத் திசையிலிருந்து தோன்றும் மின்னலும்
சூழ மின்னுதே - சேர்ந்து மின்னுகின்றன
நேற்றும் இன்றும் -
கொம்பு சுற்று - மரக்கிளைகள் சுழலும்படி
காற்று அடிக்குது -
கேணி நீர்ப்படு - கிணற்று நீரில் பிறந்த
சொறித்தவளை - புள்ளிகளை உடைய தவளை
கூப்பிடுகுதே - கூச்சல் இடுகின்றது
சேற்று நண்டு - சேற்றில் உள்ள நண்டு
சேற்றில்வளை -
ஏற்று அடைக்குது - வளைகளின் வாய்களை மூடுகின்றது
மழை தேடி ஒரு கோடி -
வானம்பாடி - மழையை விரும்புகின்ற பறவை
ஆடுது - ஆடுகிறது
போற்று திருமால் அழகர்க்கு- எல்லாரும் போற்றுகின்ற கள்ளழகர் என்னும் திருமாலுக்கு
ஏற்றம் - உயர்வாகிய
பண்ணை - வயல்களையுடைய
சேரிப்புள்ளிப் பள்ளர் - சேரிகளில் வாழும் உயர்ந்த உழவர்
ஆடிப்பாடி -
துள்ளி - மழையை
கொள்வோம் - பெற்றுக் கொள்வோம்
ஏ - அசை

**மழைக்குறி எவ்வாறு கூறப்பட்டுள்ளது?**

"ஆற்று வெள்ளம் நாளை வரும் என்பதற்கு அடையாளங்கள் காணப்படுகின்றன. மலையாள மின்னலும் ஈழ மின்னலும் சேர்ந்து மின்னுகின்றன. மரக்கிளைகள் சுழலும்படி நேற்றும் இன்றும் காற்று அடிக்கின்றது.

கிணற்றுத்தவளை கூச்சலிடுகிறது. சேற்று நண்டு தன் வளையின் வாயைச் சேற்றால் அடைக்கிறது. வானம் பாடிப் பறவைக்கூட்டம் மழையை விரும்பி ஆடுகின்றன. கள்ளழகர் விரும்பும் வயல்களையுடைய சேரியில் வாழும் உயர்ந்த உழவர்களாகிய நாங்கள் ஆடிப்பாடி மழையைப் பெற்றுக் கொள்வோம்'' என்று பள்ளர்கள் கூறுவது போல, மழைக் குறிகள் குறிக்கப்பட்டுள்ளன.



## மாதிரிக் கேள்விகள்

நேரம் : $1\frac{1}{2}$ மணி] [மதிப்பெண் : 100

1. (அ) பழைய நூல்களின் மூன்று தொகுதிகள் எவை? அல்லது பாரதிதாசனார் தம் கவிதை மூலம் பரப்பிய கருத்துகள் எவை?
   (ஆ) அழகப்பர்—அரபு வணிகர் வழக்கு எவ்வாறு முடிவு பெற்றது?
   (இ) மொட்டையன், கட்டையன், குட்டை ஆகிய மூவரும் மூடர் எனப்படுவதேன்?
   (ஈ) வானொலியால் மக்களுக்கு ஏற்படும் நன்மைகள் யாவை?
   (உ) சாதியில்லை என்பதைப் புத்தர் எவ்வாறு விளக்குகிறார்? அல்லது மழை நாளில் மறதியினால் செய்யப்படும் தவறு யாது?
   (ஊ) சர்க்கரை எப்படிச் செய்யப்படுகிறது? அல்லது இராசகிரி, கிருஷ்ணகிரிக் கோட்டைகளை விளக்குக.
2. (அ) நீலகிரித் தைலம் எப்படி இறக்கப்படுகிறது? அல்லது மாட்டுப் பொங்கல் விழாவினை விளக்கு.
   (ஆ) திரு. வி. க.வின் நற்பண்புகளை வரை. அல்லது சர் சி. வி. இராமன் அடைந்த சிறப்புகளுக்குக் காரணம் என்ன?
   (இ) பழுப்பு நிலக்கரி என்பது யாது? அது எங்கு எப்படிக் கிடைக்கிறது?
   (ஈ) பாரதியார் குழந்தைகளுக்கு அறிவுறுத்துவது

யாது? அல்லது காந்தியடிகள் வள்ளியம்மையை ஏன் போற்றினர்?

(உ) ஒற்றுமையின் சிறப்பை விளக்கும் கதையை யாவது காகமும் நாகமும் என்ற கதையையாவது அரைப் பக்கம் வருமாறு வரை.

(ஊ) உனக்குத் தெரிந்த மூன்று பழமொழிகளை எழுது.

3. (அ) 'ஒருநாள் உணவை......' எனத் தொடங்கும் நல் வழிப்பாட்டையாவது, 'ஈக்குவிடந் தலையில்......' எனத் தொடங்கும் நீதி வெண்பாப் பாட்டை யாவது பாடப் புத்தகத்தில் உள்ளபடி எழுது.

(ஆ) ஔவையார் கூறும் இரு சாதிகள் எவை?

(இ) நல்லார்க்கும் பொல்லனாக ஆவது ஏன்?

(ஈ) அற்பர்களின் குணம் எத்தகையது?

(உ) நாராயண பாரதியார் கல்வியின் சிறப்பை எப்படி விளக்குகிறார்?

(ஊ) பாஞ்சாலங்குறிச்சியின் சிறப்பு யாது?

4. (அ) தொழிற் பெயர் என்பது யாது?

(ஆ) பண்புப் பெயருக்கு நான்கு சான்றுகள் கொடு.

(இ) வினைச்சொல் என்றால் என்ன?

(ஈ) ஐந்து பால்களுக்கும் உரிய திணைகள் எவை?

(உ) நீ வரலாறு படித்தாயா?—எழுவாய், பயனிலை, செயப்படு பொருள்களை எடுத்தெழுது.

(ஊ) முருகன், செல்வி, வருகின்றார், மாடு, குதிரைகள் —இவை என்ன பால்கள்?

5. (அ) கரி, கறி; பனை, பணை; கலை, களை—பொருள் எழுதி வேறுபாட்டை விளக்கு.

(ஆ) ஏறக்குறைய, நன்றாக, சிலவகை, வளர்கிறது— இவற்றை வாக்கியங்களில் அமை.

(இ) நன்மை, பெருமை, வறியவர், புகழ்—எதிர்ச் சொற்கள் எழுது.

(ஈ) வலது பக்கம், வெண்ணை, பாம்புப்புத்து, இடது புறம்—திருத்தி எழுது.

(உ) மாடு, கோடு, மனை, சீரகம்—ஒவ்வொன்றுக்கும் இரண்டிரண்டு பொருள் எழுது.

(ஊ) உன் நண்பனுக்கு உன் தேர்வுபற்றி ஒரு கடிதம் எழுது.

---

